*வெளி*

திருச்சியில் அக்டோபர் 17, 18, 19 தேதிகளில் நடத்த உத்தேசித்திருந்த நாடகவிழா டிசம்பர் 27, 28, 29 தேதிகளுக்கு தள்ளிப் போடப்பட்டுள்ளது. குறிப்பிட்ட தேதிகளில் திருச்சி ஆர். ஆர். சபா கிடைக்காததாலும், நாடக விழாவுக்கான தொகையை திரட்டுவதில் தாமதம் ஏற்படுவதாலும் இந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது. தற்போது நல்ல நாடகங்களை நிகழ்த்த பல குழுக்கள் தயாராக உள்ளன என்பது ஆரோக்கியமான விஷயமாக இருக்கிறது. ஆனால் ஓரளவுக்கு பரவலாக எல்லாக் குழுக்களையும் உள்ளடக்கிய ஒரு செறிவான நாடக விழா நடத்துவது என்பது தனிப்பட்டவர்களுக்கு சாத்தியமில்லாமல் இருக்கிறது. இதற்கென்று உள்ள அரசாங்க நிறுவனங்களையும், கல்வி மற்றும் தனியார் நிறுவனங்களையும் தான் நம்ப வேண்டியிருக்கிறது. ஆனால் அங்கிருந்து பெரிய ஆதரவை எதிர்பார்ப்பதற்கில்லை என்பது தெரிந்தது தான். இதற்கிடையில்தான் இயங்க வேண்டியிருக்கிறது. அதனால் ஒவ்வொரு வருடமும் சில மாவட்டங்களை உள்ளடக்கிய சிறிய நாடக விழாக்களையும் நாடகம் குறித்த விவாதங்களையும் திட்டமிடலாம் என்று நினைக்கிறேன். டிசம்பரில் நடக்கும் நாடக விழா பற்றிய முழு விவரங்கள் அடுத்த இதழில் விழாவுக்கு முன்னால் தெரிவிக்கப்படும்.

1991ல் நிகழ்த்தப்பட்ட நாடகங்கள் பற்றிய சிறு குறிப்புகள் அடுத்த இதழில் வெளிவரும். வரலாற்று ரீதியான தகவல்களுக்கு இந்த குறிப்புகள் பயன்படும் என்று நம்புகிறேன். நாடகக் குழுக்கள் தாங்கள் நிகழ்த்திய நாடகங்கள் பற்றிய குறிப்புகளை அனுப்பி வைக்கவும்.

இரண்டாம் ஆண்டு நன்கொடை அனுப்பாதவர்கள் அனுப்பி உதவவும்.

---


தொடர்புக்கு : 145, 2வது தெரு, முதல் செக்டார், கே. கே. நகர், சென்னை-78.

வெளியிடுபவர் : தேன் மொழி. ஆசிரியர் : ரெங்கராஜன். தனிச் சுற்றுக்கு மட்டும்.

தனி இதழ் நன்கொடை : ரூ 6. ஆண்டு நன்கொடை ரூ 35. டிராப்ட் அனுப்புபவர்கள் பத்திரிகை பெயருக்கே அனுப்பவும்.

அச்சு : மிதிலா அச்சகம், சென்னை-600 004.


---

# ● ஒரு நடுக்கமான மீட்சிக்கு

○ *நிஜந்தன்*

## குறிப்புகள்

**மேடை**

மேடை மூன்று பகுதிகளாக பிரிக்கப்படுகிறது. மேடையின் இடது கோடியில் இருப்பது பகுதி 1 என்றும், நடுப் பகுதியில் இருப்பது பகுதி 2 என்றும், வலது கோடியில் இருப்பது பகுதி 3 என்றும் அறியப்படுகின்றன.

பகுதி 1-ல் ஒரு மேஜை மீது ஒரு டைப்ரைட்டர் உள்ளது. அதற்கு எதிர்ப்புறமுள்ள முக்காலியில் ஓர் இளம் பெண் அமர்ந்து டைப் அடித்தபடி இருக்கிறாள். இவள் பார்வையாளர்களை நோக்கியபடி இருக்கிறாள். அவளருகில் உலவியபடியே ஒரு நடுத்தர வயது ஆண் அவளுக்கு dictate செய்தபடி இருக்கிறான். இவன், பார்வையாளர்களை முன்புறம் காட்டி நடந்து வந்தும், பின்புறம் காட்டி நடந்து சென்றும் உலவுகிறான்.

பகுதி 2-ல் பாதுகாப்புப்படை வீரர்கள் போல் உடையணிந்திருந்தவர்கள் ஒரு கைதியை விசாரிக்கிறார்கள். கைதி முழங்காலிடும் போது கைகளை உயர்த்திக் கொள்கிறான். வீரர்கள் வருவதற்கும் போவதற்கும், பகுதி 2-ன் பின்புறம் ஒரு சிறு வழி உள்ளது.

பகுதி 3-ல் டென்னிஸ் ஆட்டக்கார இளைஞன் குமார் இருக்கிறான்.

**ஒளி**

மேடையின் ஒவ்வொரு பகுதியிலும் வட்டமான பரப்புடன் ஒளி படிகிறது. இந்த ஒளி வட்டங்களின் இலேசான இருள் எல்லைகளே ஒவ்வொரு பகுதியையும் பிரிக்கின்றன.

**நடிகர் உடைகள்**

பகுதி 1-ல் ஆணும் பெண்ணும் சாதாரண உடையே அணிந்திருக்கிறார்கள்.

பகுதி 2-ல் வருகிற வீரர்கள், பாதுகாப்புப் படை அல்லது காவல் துறையைச் சேர்ந்தவர்கள் என்பதைக் குறிக்கும் வகையிலான உடை அணிந்திருக்கிறார்கள். கைதிகள் சாதாரண உடையே அணிந்திருக்கிறார்கள்.

பகுதி 3-ல் இளைஞன் வெள்ளை நிற டி-ஷர்ட்டும் அரைக்கால் சட்டையும் அணிந்திருக்கிறான். அவன் சட்டையில் 'குமார்' என்று எழுதப்பட்டுள்ளது. அவன் கையில் 'ரேக்கட்' வைத்திருக்கிறான்.

அனுமானத்தில் இருப்பவை

பந்து என்பது காட்சியில் இல்லை. பந்து இருப்பது போன்ற பாவனையே செய்யப்படுகிறது.

நடுவர் காட்சியில் இல்லை. எனவே நடுவரின் குரல் மட்டும் கேட்கிறது. ஆனால் நடுவர், Net-ன் ஓரத்தின் மேலே அமர்ந்திருப்பார் என்பதால், குமார் மேலே தலையுயர்த்தி நடுவரிடம் பேசுகிறான்.

Net காட்சியில் இல்லை.

Linesmen காட்சியில் இல்லை. குரல் மட்டும் கேட்கிறது.

குமாரின் எதிர் ஆட்டக்காரன் வினோத் காட்சியில் இல்லை.

நடிப்பு

பகுதி 1-ல் ஆண் dictate செய்யும் போது அதற்கு ஏற்ற பாவனையுடனும் பெண்ணுடன் பேசும் போது அதற்கேற்ற பாவனையுடனும் இருக்கிறான். குரலிலும் இந்த பாவனை வேறுபாடு இருக்கிறது. பெண்ணும் dictate செய்யப்படுவதை டைப் அடிக்கும் போது ஒரு பாவனையையும், ஆணிடம் பேசும் போது ஒரு பாவனையையும் முகத்திலும் குரலிலும் தருகிறாள்.

பகுதி 2-ல் வீரர்களின், கைதிகளின் முக, குரல் பாவனைகள் தீவிரமாகவே உள்ளன.

பகுதி 3-ல் நடுவரின் குரல் சார்பற்று ஒலிக்கிறது. நடுவரின் குரலுக்கு இலேசாய் எதிரொலி தரப்படல் வேண்டும்.

டென்னிஸ்ஸின் shotகளான backhand, forehand, smash, Volleying போன்றவற்றைப் புரிந்த நடிகர், குமாராய் நடிப்பது நலம்.

○ ○ ○

(மேடையின் பகுதி 2 (நடுப்பகுதி)-ல் ஒளி அதிகரிக்கிறது.
சில வினாடிகள் நகருகின்றன. மௌனம் நிலவுகிறது.

பாதுகாப்புப் படை வீரர்களாய் உடையணிந்த நான்கு பேர், ஒருவனைக் கைதி போல் கைகளால் பிடித்தபடி இழுத்துக் கொண்டு வருகிறார்கள். அவன் மிகவும் சோர்ந்து இருக்கிறான். அவனை முழங்காலில் நிற்கும்படி செய்கிறார்கள், வீரர்கள். அவர்கள் தம் துப்பாக்கிகளின் முனைகளை, அவனுடைய முதுகைத் தொடும்படி வைத்துக் கொள்கிறார்கள். அவர்களுடைய முகங்கள் இறுக்கமாக இருக்கின்றன.)

வீரன் 1: (கைதியிடம்) சொல்.

வீரன் 2: (கைதியிடம்) உண்மையைச் சொல்.

(மேடையின் பகுதி 2-ல், ஒளி குறைந்து, இருளாகிறது.

மேடையின் பகுதி 3-ல் (மேடையின் வலப்பகுதியில்) ஒளி அதிகரிக்கிறது.

குமார் நின்று இருக்கிறான்.

அவன் பந்தை (பந்து இல்லை என்பதால், வெறும் பாவனையாக) கீழே தட்டியபடி இருக்கிறான்.

டென்னிஸ் ஆட்ட நடுவரின் குரல் பின்னணியில் ஒலிக்கிறது.)

நடுவரின் குரல் : நேரம் ஆகிவிட்டது. திரு. குமாருக்கும் திரு. வினோத்திற்கும் இடையே இறுதி ஆட்டம் நடைபெற உள்ளது.

(குமார் பந்தைக் கீழே தட்டி serve செய்கிறான்.

மேடையின் பகுதி 3-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

மேடையின் பகுதி 1 (மேடையின் இடப்பகுதி)-ல் ஒளி அதிகரிக்கிறது.

இளம் பெண் அமர்ந்து 'டைப்' அடித்தபடி இருக்கிறாள். அருகே, நடுத்தர வயது ஆண் உலவியபடியே, dictate செய்து கொண்டு இருக்கிறான்.)

ஆண் : விசாரணை தொடர்ந்து நடைபெறுகிறது.

பெண் : (டைப் அடித்தபடி) தொடர்ந்து?.........

ஆண் : நடைபெறுகிறது......முழுமையான விவரங்கள்......தெரிய அதிகக் காலம் பிடிக்கலாம்...........எனினும், முயற்சிகளை விடப் போவதில்லை என்று அறிவிக்கிறது.........

பெண் : அரசாங்கம் ?...........

ஆண் : அறிவிக்கிறது............

(பகுதி 1-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 2-ல் ஒளி அதிகரிக்கிறது. முழங்காலில் நிற்கும் கைதியின் முதுகு தொடும் துப்பாக்கிகளோடு வீரர்கள் இருக்கிறார்கள்.)

வீரன் 3: (கைதியிடம்) நீ சொல்லித்தான் ஆக வேண்டும்.

வீரன் 4: (கைதியிடம்) சொல்.

கைதி : (தளர்வாய்) எதை?

வீரன் 1: (கைதியிடம்) நீ மறைப்பதை.

கைதி : நான் எதை மறைக்கிறேன்?

வீரன் 2: தெரியவில்லை.

வீான் 3: (கைதியிடம்) ஆனாலும் சொல்லிவிடு.

(பகுதி 2-ல் ஒளி குறைந்து இருளாகிறது.
பகுதி 3-ல் ஒளி அதிகரிக்கிறது.
குமார் டென்னிஸ் ஆடியபடி இருக்கிறான்.)

நடுவரின் குரல் : முப்பது — நாற்பது.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். நிற்கிறான்.)

நடுவரின் குரல் : Deuce.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். ஒரு shot ஆடிவிட்டு நிற்கிறான்.

நடுவரின் குரல் : Advantage குமார்.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். மகிழ்ச்சியுடன் நிற்கிறான்).

நடுவரின் குரல் : game குமார்.

(பகுதி 3-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 1-ல் ஒளி அதிகரிக்கிறது.
பெண் டைப் அடித்தபடி இருக்கிறாள். ஆண் உலவியபடி dictate செய்து கொண்டு இருக்கிறான்.)

ஆண் : இதுவரை சிக்கல் எதுவும் இல்லை...வெற்றி சாத்தியம் என்றே தோன்றுகிறது......ஆனால் ஆட்டத்தின் போக்கு எப்படி மாறும் என்று சொல்ல இயலாது......

பெண் : (டைப் அடித்தபடி) போக்கு........

ஆண் : சொல்ல இயலாது.

பெண் : எப்படி மாறும் என்று?—

ஆண் : சொல்ல இயலாது........

(பெண் டைப்ரைட்டரில் இருந்து அடித்த காகிதங்களை எடுத்துவிட்டு வெற்றுக் காகிதங்களை வைக்கிறாள்.)

ஆண் : (dictate செய்தபடி) விசாரணை தீவிரமாக நடக்கிறது......
அனேகமாய் ஒரு முக்கியமான விவரம் விரைவிலேயே சாத்தியப்படலாம்...

பெண் : (டைப் அடித்தபடி) சாத்தியப்படலாம்......

ஆண் : இது ஒரு வகையில் நம்பிக்கையளிக்கிற போக்கு.........
சிக்கல்களுக்கு விடைகள் கிடைக்கும் வாய்ப்புகள் தெரிகிற சூழல்

(ஆண் சொல்லிக் கொண்டு இருக்கும்போதே, பகுதி 1-ல் ஒளி குறைந்து இருளாகிறது. அதே கணத்தில், பகுதி 2-ல் ஒளி அதிகரிக்கிறது. ஒளி அதிகரிப்பின் போதே, வீரர்கள், கேள்விகள் கேட்டபடி இருக்கிறார்கள்.

வீரன் 1: (கைதியிடம்) எங்களுக்குத் தெரியும்.

கைதி : என்ன?

வீரன் 2: நீ எதையோ மறைக்கிறாய்.

வீரன் 3: (கைதியிடம்) நீ எதை மறைக்கிறாய் என்பதும் தெரியும்.

கைதி : பிறகு, எதற்கு என்னிடம் கேட்கிறீர்கள்?

வீரன் 4: நீ மறைப்பதை எங்களால் பொறுத்துக் கொள்ள முடியாது......

கைதி : நான் மறைக்க முயலவில்லை. ஆகையால் எதையும் சொல்ல எப்படி முயல்வது?.........

வீரன் 1: (கைதியிடம்) அதிகம் பேசாதே.

கைதி : ஆயினும் எங்கள் போராட்டம் வெல்லும்.

வீரன் 2: (கைதி மீது துப்பாக்கியால் இடித்து) பேசாதே. நீயும் பிணமாகிப் போவாய்......

(வீரன் 2 பேசிக் கொண்டிருக்கும் போதே பகுதி 2-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 3-ல் ஒளி அதிகரிக்கிறது.

குமார் ஆடியபடி இருக்கிறான். ஒரு shot அடித்து நிற்கிறான்.)

நடுவரின் குரல் : பூஜ்யம்—முப்பது.

(குமார் பந்தை எதிர்பார்த்து நிற்கிறான். ஆடுகிறான். நிற்கிறான்.)

நடுவரின் குரல் : பூஜ்யம் — நாற்பது.

(குமார் மகிழ்கிறான். மீண்டும் பந்தை எதிர்பார்த்து நிற்கிறான்.

ஆடுகிறான். பந்தை எட்ட முயன்று தோற்று நிற்கிறான்.)

நடுவரின் குரல் : பதினைந்து— நாற்பது.

(குமார் சோர்வாய் தலையாட்டிக் கொள்கிறான். மீண்டும் பந்தை எதிர் பார்த்து நிற்கிறான். ஆடுகிறான். மகிழ்ச்சியாய் ஒரு கையை உயர்த்திய படி நிற்கிறான்.)

நடுவரின் குரல் : Game, set — குமார்.

குமார் ஒன்று—பூஜ்யம் என்ற செட் கணக்கில் முன்னணியில் இருக்கிறார்.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். சோர்வாய் நிற்கிறான்.)

நடுவரின் குரல் : பூஜ்யம் — பதினைந்து.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். இயலாமையோடு நிற்கிறான்).

நடுவரின் குரல் : பூஜ்யம்—முப்பது
(பகுதி 3-ல் ஒளி குறைந்து இருளாகிறது.
பகுதி 1-ல் ஒளி அதிகரிக்கிறது.)

ஆண் : (உலவியபடி) சாதனையை நோக்கித்தான் முன்னேற்றம்...பாதை கடுமை யானது எனினும்......அனேகமாய் சுமுகமாகவே பயணப்பட நேரிடும்......

பெண் : (டைப் அடித்தபடி) நேரிடும்......

ஆண் : கடுமையான சூழல்கள் அவசியமானவை......மிக துல்லியமான நடவடிக் கைகள் எடுக்கப்பட்டு விட்டன......

பெண் : (டைப் அடித்தபடி) அவசியமானவை......எடுக்கப்பட்டுவிட்டன.........

ஆண் : விசாரணை மரணத்தைத் தரலாம்...........ஆனால் நல்ல தீர்வுகளுக்கு மரணங்கள் அவசியமானவை......

பெண் : மரணங்கள்.........

ஆண் : இது வரை சில நிகழ்ந்துள்ளன.

பெண் : (ஆணிடம்) சுமார்?

ஆண் : எண்ணிக்கை சுமை தருவது......செயல்களே முக்கியமானவை......

பெண் : (ஆணிடம்) செயல்களும் சுமை கொண்டவை......

ஆண் : (பெண்ணிடம்) உன் செயல் டைப் அடிக்க வேண்டியது......

பெண் : (ஆணிடம்) எனவேதான்......(டைப் அடித்தபடி) சில நிகழ்ந்துள்ளன.
(பகுதி 1-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 2-ல் ஒளி அதிகரிக்கிறது.

நான்கு வீரர்களும் விலகிக் கொள்ள, கைதி மல்லாந்து விழுகிறான். அவன் முதுகில் இரத்தம் சொட்டுகிறது. அவனைத் திருப்பி, கால் கையைப் பிடித்தபடி, மெல்லத் தூக்கிச் செல்கிறார்கள் வீரர்கள்.

அமைதி நிலவுகிறது.

நான்கு வீரர்களும் வேறொருவனைப் பிடித்து இழுத்தபடி வருகிறார்கள். அவனையும் முழங்காலில் நிற்க வைத்து, அவன் முதுகில் துப்பாக்கிகளின் முனைகள் தொடும்படி வைத்து நிற்கிறார்கள்.)

வீரன் 1: (கைதியிடம்) சொல்.

கைதி : எதைச் சொல்வது?

வீரன் 2: உன் கூட்டத்தினர் எவ்வளவு பேர்?

கைதி : தற்போது நான் மட்டும் தான்.

வீரன் 3: எங்கே போனார்கள் மற்றவர்கள்?

கைதி : அநேகமாய் புதை குழிக்குள். அல்லது உங்கள் கிடங்குகளில் மரித்துப் போய்.

வீரன் 4: பொய் சொல்லாதே.

கைதி : இல்லை.

வீரன் 1: உன் போராட்டம் இனி யாரை மகிழ்விக்கப் போகிறது?

கைதி : அனேகமாய் உங்கள் அனைவரை.

வீரன் 2: மரியாதையாகப் பேசு.

கைதி : நிலைநாட்டல் பற்றிய கனவு.

(வீரன் 2 கைதியின் முதுகில் துப்பாக்கியால் இடிக்கிறான். கைதி கதறு கிறான்.

பகுதி 2-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 3-ல் ஒளி அதிகரிக்கிறது.

குமார், டென்னிஸ் ஆடியபடி இருக்கிறான். சோர்வாய் நிற்கிறான்.)

நடுவரின் குரல் : பதினைந்து — நாற்பது.

(குமார் serve செய்து ஆடுகிறான். ஏமாற்றத்துடன் தலை ஆட்டி நிற் கிறான்.)

நடுவரின் குரல் : Game வினோத்.

(குமார் பந்தை எதிர்பார்த்து நிற்கிறான். பந்தை தடுக்க முயன்று தோற்கிறான்.)

நடுவரின் குரல் : பதினைந்து—பூஜ்யம்.

(குமார் பந்தை எதிர்பார்த்து நிற்கிறான். பந்தின் திசை பார்த்து ஏமாறு கிறான்.)

நடுவரின் குரல் : முப்பது—பூஜ்யம்

(குமார் பந்தை எதிர்பார்த்து நிற்கிறான். நின்றபடியே இருக்கிறான்.)

நடுவரின் குரல் : நாற்பது — பூஜ்யம்.

குமார் பந்தை எதிர்பார்த்து நின்று பந்தின் திசை நோக்கி முயன்று தோற்று நிற்கிறான்.)

நடுவர் குரல் : Game, set — வினோத். திரு. குமார், திரு. வினோத் இருவரும் ஒவ்வொரு செட் வெற்றி பெற்றுள்ளனர்.

(பகுதி 3-ல் ஒளி குறைந்து இருளாகிறது.

பகுதி 1-ல் ஒளி அதிகரிக்கிறது. ஆண் நடந்தபடி இருக்க, பெண் ‘டைப்’ அடித்தபடி இருக்கிறாள்)

ஆண் : எது வேண்டுமானாலும் நிகழலாம் .....ஆனால் கனவுகளும் எதிர்பார்ப்பு களும் கனக்கின்றன......எப்படியாயினும் ஏதாவது ஒன்று நிகழ்ந்தாக வேண்டும்......இனி முடிவுகளை எதிர்பார்க்கத் துவங்கலாம்......எதிர்பாரா ததும் எதிர்பார்க்கப்பட வேண்டியதே.....

பெண் : (ஆணிடம்) நிகழ்வுகள் பொருளற்றவை...........திரைகள் களையப்படல் வேண்டும்.........நியாயப்படுத்தல் கொடுமையானது...........பொறுத்துக் கொள்ள இயலாதது......

ஆண் : (பெண்ணிடம்) இதை டைப் அடிக்க வேண்டாம்.

பெண் : (ஆணிடம்) வேண்டாமா?

ஆண் : (பெண்ணிடம்) வேண்டாம்.........

பெண் : (ஆணிடம்) வெறும் எந்திரம்தானா?......

ஆண் : (பெண்ணிடம்) எந்திரம்தான்

பெண் : (டைப் அடிக்கத் துவங்கி, வெறுப்புடன்) எந்திரம்தான்......

ஆண் : (பொதுவாக) ஆனாலும், உனக்கும் வாய்ப்பு வரும்.

ஆண் : (பெண்ணிடம்) இதையும் அடித்துவிட்டாயா?

பெண் : (டைப் அடித்தபடி) அடித்துவிடவில்லை......

ஆண் : (dictate செய்தபடி) அடித்துவிடவில்லை என்றாலும் என்ன?......... நிகழ்வுகள் நிகழ்வுகள் தானே......நிகழ்ந்தவைகளை மாற்றுவது எவ்வளவு சிரமம் மிக்கதாய் இருக்கிறது......என் மனைவி......

பெண் : (டைப் அடித்தபடி) மனைவி?......

ஆண் : என் இறுதிச் சொட்டு இரத்தத்தை எப்போது உறிஞ்சுவாளோ......

பெண் : கடைசியில்......

ஆண் : கடைசியிலா?.........(பெண்ணிடம்) நான் சொல்வதை மட்டும் நீ டைப் அடிக்க வேண்டும்...........

பெண் : (டைப் அடித்தபடி) டைப்ரைட்டர் உயிர் கொள்ளத் துவங்கியுள்ளது......

ஆண் : மீண்டும் ஒரு மரணம் நிகழும் வாய்ப்புகள் உள்ளன.
(பெண் டைப் அடிக்கிறாள்.
பகுதி 1-ல் ஒளி குறைகிறது.
பகுதி 2-ல் ஒளி அதிகரிக்கிறது. முழங்காலில் நிற்கும் கைதியின் முதுகைத் துப்பாக்கி முனைகளால் தொட்டபடி வீரர்கள் நிற்கிறார்கள்).

வீரன் 3: (கைதியிடம்) நாங்கள் எதிர்பார்ப்பதை நீ சொல்ல வேண்டும்.

கைதி : மரணத்தின் விளிம்பில் ஒரு கதை சொல்லும் சுவாரஸ்யம் எனக்கு இல்லை.

வீரன் 4: நேரம் வீணாகிக் கொண்டிருக்கிறது.

கைதி : அப்படித்தான் நானும் எண்ணுகிறேன்.

வீரன் 1: இன்னும் நிறைய பேரை விசாரிக்க வேண்டிய அவசியத்தில் இருக்கிறோம் நாங்கள்.

கைதி : உங்கள் பணியை நான் தடுக்கவில்லை.

வீரன் 2: திமிராய்ப் பேசாதே.

கைதி : மரணம் பற்றிய மாயை எனக்கு இல்லை.

வீரன் 3: நீ பேசுவது புரியவில்லை.

கைதி : புரிதல் மட்டுமே தீர்வு தருவது இல்லை.

வீரன் 4: குழப்பாதே.

கைதி : நான் முயற்சி செய்வதை கைவிட்டு விட்டேன்.

வீரன் 1: உன் போராட்டம்......

கைதி : அது தொடரும்......

வீரன் 2: அதனால் எங்களுக்கு என்ன லாபம்?......

கைதி : எப்படியும் சாகடிக்கப் போகிற ஒரு கைதியுடன், இப்படி சோர்வளிக்கிற ஒரு விசாரணையை வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் அனேகமாய் இராது உங்களுக்கு......

வீரன் 3: உன் இயக்கம் சோர்வுதான் அளிக்கிறது.

வீரன் 4: இன்னொரு கைதியை சந்திக்க வேண்டிய சுவாரஸ்யத்தில்தான் இருக்கிறோம் நாங்கள்,
(பகுதி 2-ல் ஒளி குறைந்து இருளாகிறது.
கைதி அலறும் ஒலி கேட்கிறது.
பகுதி 3-ல் ஒளி அதிகரிக்கிறது. குமார், டென்னிஸ் ஆடியபடி இருக்கிறான். ஒரு shot ஆடி, பந்து எதிர் Court-ல் செல்வதை பார்த்தபடி நிற்கிறான். தளர்வாய் நிற்கிறான்)

நடுவரின் குரல் : Game வினோத்
(குமார் serve செய்கிறான். பந்து, Court ஆகிவிட்டதை உணர்த்தும் பொருட்டு 'க்ளிங்' என்ற ஒலி கேட்கிறது).

லைன்ஸ்மேனின் குரல் : Court

நடுவரின் குரல் : First Service
(குமார் மீண்டும் serve செய்கிறான்)

லைன்ஸ்மேனின் குரல் : Court

நடுவரின் குரல் : பூஜ்யம்—பதினைந்து

குமார் மெல்ல நடந்து, முன்னே வருகிறான். நடுவர் அமர்ந்திருக்கும் (நடுவர் இல்லையென்பதால் பாவனையாக) திசை நோக்கி மேலே பார்க்கிறான்.

குமார் : (நடுவரிடம்) எப்படி?

நடுவரின் குரல் : கோணங்கள் மாறுபடுகின்றன

குமார் : இரண்டாம் முறை Court ஆகவில்லை..

நடுவரின் குரல் : இரட்டைத் தவறு.

குமார் : இரண்டாம் முறை எந்திரம் ஒலியெழுப்பவில்லை.

நடுவரின் குரல் : இருக்கலாம்.

குமார் : எந்திரத்தின் மீதான அதிகாரத்தை எது உங்களுக்கு வழங்குகிறது?

நடுவரின் குரல் : அமைதியாய் இருங்கள். சகிப்புத் தன்மை தவிர்க்க இயலாதது.

குமார் : சாதகங்களை நோக்கியதல்ல என் விவாதம்.

நடுவரின் குரல் : ஆட்டத்தைத் தொடருங்கள்.

குமார் : இது நியாயமல்ல.

நடுவரின் குரல் : இந்த நம்பிக்கை சரியானதல்ல.

குமார் : இருப்பினும் நான் ஆட்டம் தொடர வேண்டும்.
(குமார் பின்னே சென்று கோட்டில் நிற்கிறான். பந்தைத் தட்டி serve செய்கிறான். ஆடுகிறான். ஓங்கி அடிக்கிறான். ஏமாந்து நிற்கிறான்).

நடுவரின் குரல் : பூஜ்யம்—முப்பது.
(குமார் மீண்டும் serve செய்கிறான். ஆடுகிறான். பந்தை உயர்த்தி அடிக்கிறான். பந்து போகும் திசையைப் பார்த்தபடி இருக்கிறான்).

நடுவரின் குரல் : பூஜ்யம்—நாற்பது.
(குமார் மெல்ல முன்னே நடந்து வந்து, நடுவரின் திசை பார்த்து மேலே நோக்குகிறான்.)

குமார் : பந்து வெளியே விழவில்லை.

நடுவரின் குரல் : நடுவர்கள் தவறு செய்வதில்லை.

குமார் : இது எனக்கு சோர்வளிக்கிறது.

நடுவரின் குரல் : இதைத் தவிர்ப்பதற்காகத்தான் ஆட்டமே.

குமார் : உங்கள் முடிவுகள் மாற்றங்களைத் தரும்.

நடுவரின் குரல் : அவை வாழ்வின் சுவாரஸ்யங்கள்.

குமார் : எனக்கு எதிரானவை அவை.

நடுவரின் குரல் : இந்த எண்ணம் சுவை கூட்டும்

குமார் : தோற்பதற்காகவா நான் இனி ஆட வேண்டும்?

நடுவரின் குரல் : ஆட வந்தாகிவிட்டது அல்லவா ?

குமார் : என் தோல்விக்கு நீங்கள் காரணமாகலாம்.

நடுவரின் குரல் : இந்த எண்ணமே ஆட்டத்திற்கு பொருள் கொடுக்கிறது.

(குமார் பின்னே சென்று கோட்டில் நின்று, serve செய்கிறான். ஆடுகிறான். ஓங்கி அடிக்கிறான்.)

நடுவரின் குரல் : பதினைந்து—நாற்பது.
(குமார் serve செய்கிறான். ஆடுகிறான். பந்தை எட்ட முயன்று கீழே விழுகிறான்.)

நடுவரின் குரல் : Game, set வினோத், இரண்டுக்கு ஒன்று என்ற செட் கணக்கில் வினோத், குமாரைவிட முன்னணியில் இருக்கிறார்.

குமார் : (தனக்குள்) தோல்வியின் துவக்கம், விடுதலையை உணர்த்துகிறது.
(குமார் எழ எத்தனிக்கிறான்.
பகுதி 3—ல் ஒளி குறைந்து இருளாகிறது.
பகுதி 1-ல் ஒளி அதிகரிக்கிறது.
ஆண் நடந்தபடி, dictate செய்து கொண்டிருக்க, பெண் டைப் அடித்தபடி இருக்கிறாள்.)

ஆண் : இனி பொறுமையாய் இருப்பதில் பொருளில்லை.

பெண் : (டைப் அடித்தபடி) அதே பொருளில்லை.

ஆண் : (பெண்ணிடம்) புதிதாய் எதையும் சேர்க்காதே.

பெண் : (டைப் அடித்தபடி) சேர்க்கலாம்.

ஆண் : (பெண்ணிடம்) உன் திமிரையும் மீறி உன்னை நான் பொறுத்துக் கொள்கிறேன்.

பெண் : (டைப் அடித்தபடி) பொறுத்துக் கொள்ளலாம்.

ஆண் : (dictate செய்தபடி) உன்னை ரசிக்கிறேன்.

பெண் : (டைப் அடித்தபடி) எப்படியும் ஏதாவதை நிகழ்த்தியாக வேண்டும்.
(ஆண் dictate செய்தபடி சொல்ல, பெண் டைப் அடித்தபடி சொல்லுகிறாள்.)

ஆண் : என் இறுதிச் சொட்டு இரத்தமே மிச்சமிருக்கிறது. அதையும் குடிக்க காத்திருக்கிறாள் என் மனைவி.

பெண் : உலகம்......

ஆண் : புதிய உற்சாகம் கொடு நீ......

பெண் : கொடைகளை நம்பவில்லை என்பதால்......

ஆண் : உன் இயல்பும், அழகும் சிகரமாய் ஒளிர்கின்றன.

பெண் : பாதுகாப்பிற்கான ஏக்கம் தவிர்க்க இயலாதது.

ஆண் : நீ எனக்கு உதவ வேண்டும்.

பெண் : இருளும் இருள் அகலும் நேரமும்......

ஆண் : இல்லையெனில் நான் இறந்து போய்விடக் கூடும்.

பெண் : உறக்கமும், உறக்கம் அகலும் நேரமும்

ஆண் : இனி எதுவும் எனக்கு உயிரளிக்காது.

பெண் : நள்ளிரவின், நடுக்கம் உறைந்த நம்பிக்கை

ஆண் : என்னோடு வாழ வேண்டும் நீ......

பெண் : எப்படியும் முடிந்து விடும் காலம்......

ஆண் : பொருள் பெற புகலிடம் கொடு

பெண் : எனக்கு விருப்பமில்லை என்பது உண்மையானது.

ஆண் : ஏமாற்றங்களை சுமக்க இயலாது இப்போது என்னால்

பெண் : தவிர்க்க இயலாமைகளே வாழ்வின் நிஜங்கள்

ஆண் : உன் மறுப்பு உனக்கு ஆபத்தாக முடியும்.

பெண் : இப்படித்தான் நகரும் வாழ்வு

ஆண் : நான் பொறுமை இழந்தால், உன் வாழ்தலே கேள்வியாகிவிடும்.

பெண் : (ஆணிடம்) கேள்விகளை ரசிக்கிறேன் நான்.

(பகுதி 1-ல் ஒளி குறைந்து இருளாகிறது.
பகுதி 2-ல் ஒளி அதிகரிக்கிறது. ஒளி அதிகரிக்கையில், நான்கு வீரர்களும் வேறொரு கைதியை இழுத்து வருகிறார்கள். அவனை அவனது முழங் காலில் நிற்க வைத்து, அவனது முதுகில் துப்பாக்கி முனைகளை தொட்டு நிற்கிறார்கள் வீரர்கள்.)

கைதி : (பொதுவாக) வெற்றியை நோக்கி நகர்கின்றது நம் வாழ்வு

வீரன் 1: (கைதியிடம்) வாழ்வதற்கு ஏதாவதொரு நம்பிக்கை தேவைப்படுகின்றது உங்கள் கூட்டத்திற்கு.

கைதி : எதுவும் இல்லாமல் தானே நகர்கின்றன உங்கள் நாட்கள்

வீரன் 2: எங்களுக்குப் பணி இருக்கிறது.

கைதி : எப்படியும் பொருள் மாறும்

வீரன் 3: மாற்றங்கள் சுவை தரலாம் எங்களுக்கும்

கைதி : யாரும் அதிலிருந்து தப்பிக்க இயலாது.

வீரன் 4: ஏதாவது சொல் நீ......

கைதி : எங்கள் இயக்கத்திற்கு உதவுங்கள் நீங்கள்

வீரன் 1: உன் உயிர் மீது உனக்கு அக்கறை இல்லை போலிருக்கிறது.

கைதி : உங்கள் நலன் மீது எனக்கு உண்டு அக்கறை. காரணம் நீங்களும் என் தேசத்து மனிதர்கள்.

வீரன் 2: எங்களுக்கு என்ன வழி?

கைதி : உங்கள் அடிமைத்தனம் மறைய வேண்டும்.

வீரன் 3: இதயத்தில் பதிந்து போயின கட்டளைகள்.

கைதி : தினமும் இறப்பதும், இறக்கடிப்பதும் அல்ல வாழ்வு.

வீரன் 4: தோளில் கனக்கும் துப்பாக்கிகள்

கைதி : உயிரற்று உதிரும் தோட்டாக்கள்

வீரன் 1: உன் பேச்சு மயக்காது, நினைவிருக்கட்டும்.

கைதி : எங்கள் போராட்டம் வெற்றியெனில், உங்கள் தன்மானம் நிலைக்கும்.

வீரன் 2: சோர்ந்து போனது வாழ்வு.

கைதி : வெறுப்பின் சங்கிலிகள் விடுபடும்.

வீரன் 3: வடுக்கள் பதித்தவை.

கைதி : காலத்தின் போக்கில் கடமை எதிர்படும்.

வீரன் 4: பொருள் புரிபடும்.

கைதி : எனவே எனக்கு உதவிடுங்கள்.

வீரன் 1: நாங்கள் விட்டுக் கொடுப்பதில்லை.

கைதி : சமரசங்கள் வெற்றியின் படிக்கட்டுகள்

வீரன் 2: யாரும் அதிலிருந்து தப்பித்ததில்லை......

கைதி : எப்படியும் வாழலாம்.

வீரன் 3: நெருப்பிலிருந்து விலகிவிடலாம்

கைதி : தென்றல் வீசும்.

வீரன் 4: சொர்க்கம் வழிவிடும்.

கைதி : இனி நீங்கள் அனைவரும் எங்கள் பக்கம்.

வீரன் 1: உன் திட்டம் நிறைவேறாது.

கைதி : நீ மட்டும் தனியாகி விடுவாய்.

வீரன் 2: (வீரன் 1 இடம்) பாதையிலிருந்து விலகிவிடுவாய்

வீரன் 3: பள்ளத்தில் வீழ்ந்து விடுவாய்.

வீரன் 4: எங்கள் வெறுப்புக்கு ஆளாகிவிட்டாய்

வீரன் 1: துரோகிகளே !
(கைதியின் முதுகில் பதித்த துப்பாக்கிகளை வீரன் 2, வீரன் 3, வீரன் 4 விலக்கிக் கொள்கிறார்கள். வீரன் 1 மட்டும் விலக்காமல் நிற்கிறான்,)

வீரன் 2: (வீரன் 1 இடம்) துப்பாக்கியை விலக்கிவிடு.

வீரன் 1: நான் துரோகியாக மாட்டேன்.

வீரன் 3; (வீரன் 1 இடம்) உன் இயக்கம் சரியானதல்ல.

வீரன் 4: இதற்காக நீ வருந்த நேரிடும்.

கைதி : (எழுந்து கொண்டு, வீரன் 1 ஐக் காட்டி, மற்ற வீரர்களிடம்)
இவன் நம் போக்கிற்கு தடையாய் இருக்கிறான். எனவே இவனைப் பிடித்து வைப்போம்.

வீரன் 2: வேறு வழிகள் நமக்குக் கற்றுத் தரப்படவில்லை.
(வீரன் 3, விரைவாக வீரன் 1-ஐப் பிடித்துக் கொள்கிறான். வீரன் 2-ம் அவனைப் பிடித்துக் கொள்ள, வீரன் 4 அவனிடமிருந்து துப்பாக்கியைப் பறித்துக் கொள்கிறான். வீரன் 1-ஐ முழங்காலில் நிற்கச் செய்கிறார்கள் மற்றவர்கள். அவன் முதுகில் துப்பாக்கிகளின் முனைகள் தொடும்படி வைத்து நிற்கிறார்கள் அவர்கள் .)

கைதி : வீரன் 1 இடம்) இனி நீ தப்பிக்க முடியாது.

வீரன் 1: உன் நிலை வேறு எதையும் சொல்ல வைக்காது.

வீரன் 2: (வீரன் 1 இடம்) நீ பிழைப்பது சந்தேகமே.

வீரன் 1: அப்படி எந்த ஆசையும் இல்லை. என்னிடம்.

வீரன் 3: விடுபட வாய்ப்பு கிடைக்கும் என்று கனவு காணாதே.

வீரன் 1: கனவு காணுவதைவிட எளிதான தண்டனையே நான் பெறக்கூடும்.

வீரன் 4: அநேகமாய் உன் கூட்டாளிகளை நீ காட்டிக் கொடுக்க வேண்டியிருக்கும்.

வீரன் 1: துரோகம் செய்வது எளிதான காரியம் என்று உனக்கு நன்கு தெரியும்.
(வீரன் 4, வீரன் 1-ன் முதுகை துப்பாக்கி முனையால் இடிக்கிறான்.
வீரன் 1, கதறுகிறான்.)

கைதி : (வீரன் 1 இடம்) அடக்கு முறையின் வலியை நீ உணர்கிறாய் அல்லவா?

வீரன் 1: வாழ்தல் வலி நிறைந்தது.

வீரன் 2: உன் மரணம் உன் கூட்டாளிகளுக்கு எச்சரிக்கை விடும்.

வீரன் 1: இப்படியான எண்ணம் என்னை ஒரு காலத்தில் மகிழ்வித்தது உண்டு.
(வீரன் 1, வீரன் 2, வீரன் 3, வீரன் 4, கைதி ஆகியோர் அசையாமல் அப்படியே உறைந்து இருக்கிறார்கள்.
பகுதி 2-ல் ஒளி குறையவில்லை.
பகுதி 3-ல் ஒளி அதிகரிக்கிறது.
குமார் டென்னிஸ் ஆடியபடி இருக்கிறான். முன்னே ஓடி வந்து shot-ஐ அடிக்கிறான். மகிழ்ந்து தலையாட்டுகிறான்.)

நடுவரின் குரல் : Game குமார். இந்த நான்காவது set-ல் ஐந்துக்கு நான்கு என்ற Game கணக்கில் திரு. வினோத் முன்னணியில் இருக்கிறார்.
(குமார், பின்னே சென்று கோட்டில் நின்று பந்தை எதிர்பார்த்து நிற்கிறான். பந்தைத் தடுக்க முயல்கிறான்.)

நடுவரின் குரல் : பதினைந்து — பூஜ்யம்.
(குமார் நம்ப முடியாதவன் போல் தலையாட்டிக் கொள்கிறான். மீண்டும் பந்தை எதிர்பார்த்து, கோட்டில் நிற்கிறான். பந்து வர, ஆடுகிறான். ஒரு shotஐ அடித்துவிட்டு நிற்கிறான்.)

நடுவரின் குரல் : முப்பது—பூஜ்யம்.
(அதிர்ச்சி அடைந்தவனாய் இடுப்பில் கை வைத்து நிற்கும் குமார், மெல்ல நடந்து வந்து, நடுவரின் திசை நோக்கி மேலே பார்த்து நிற்கிறான்)

குமார் : (நடுவரை நோக்கி) இது நியாயமல்ல.

நடுவரின் குரல் : இந்தப் பிரமை இன்னுமா அழியவில்லை?

குமார் : அந்த பந்து உள்ளே விழுந்துதான் சென்றது.

நடுவரின் குரல் : வெளியே விழுந்தது.

குமார் : நீங்கள் சரியாகக் கவனிக்கவில்லை.

நடுவரின் குரல் : என் தீர்மானங்கள் சரியானவை.

குமார் : உங்கள் தவறான கணிப்புகளால் விதிகள் பொருளிழக்கின்றன.

நடுவரின் குரல் : நீங்கள் எச்சரிக்கப்படுகிறீர்கள். நேரமாகிறது. ஆட்டம் தொடரட்டும்.

குமார் : (பின்னே நகர்ந்தபடி) ஆட்டம் தொடரும்—உங்கள் தீர்மானத்தின்படி. (குமார் பின்னே கோட்டில் நின்று பந்தை எதிர்பார்க்கிறான். பந்து வர, ஆடுகிறான். பந்தைத் தடுக்க முயன்று பாய்கிறான். வழுக்கி விழுகிறான். அப்படியே கிடக்கிறான்.)

நடுவரின் குரல் : நாற்பது பூஜ்யம்
(பகுதி 3ல் ஒளி நிலைக்கிறது.
பகுதி 1-ல் ஒளி அதிகரிக்கிறது.
ஆண், உலவிக் கொண்டே dictate செய்தபடி இருக்கிறான்.
பெண், டைப் அடித்தபடியே சொல்லிக் கொண்டு இருக்கிறாள்.)

ஆண் : மாற்றங்கள் நிகழும் சூழல்.

பெண் : எதுவும் நிகழும், சூழலில்.

ஆண் : ஆட்டம் எப்படியும் போகலாம்.

பெண் : தோல்வியின் பிரக்ஞையே தோல்விக்கு நிரூபணம்.

ஆண் : தோல்விக்கு நிரூபணம்.

பெண் : தோற்றவர்கள் வெற்றி பெறுகிறார்கள். வெற்றி பெற்றவர்கள் தோற்கிறார்கள்.

ஆண் : .........வெற்றி பெற்றவர்கள் தோற்கிறார்கள்.

பெண் : ஆட்டத்தின் விதிகள், ஆட வந்த பின் மாறுகையில் முடிவின் பொருளும் மாறுகிறது.

ஆண் : ......பொருளும் மாறுகிறது.

பெண் : அதிகாரமும் அடிமைத்தனமும் ஒன்றையொன்று ஆள்கின்றன.

ஆண் : ......ஆள்கின்றன.
(பகுதி 3-ல் குமார் மெல்ல எழ முயல்கிறான். எழுந்து, நொண்டி, நொண்டி நடக்கிறான்).

பெண் : ஆட்டத்தைத் துவக்க முயற்சி நடக்கிறது.

ஆண் : ......முயற்சி நடக்கிறது.
(ஆணும், பெண்ணும் பேசுவது, அவர்களின் உதட்டு அசைவு மூலமாகத் தெரிகிறது. ஒலி கேட்பதில்லை.
பகுதி 2-ல் கைதியும், வீரர்களும், உறைந்த நிலையில் இருந்து விடுபடுகிறார்கள்).

வீரன் 1: இப்பொழுது செய்கிற செயல்களுக்கு நீங்கள் பின்னர் வருந்த நேரிடும்.

கைதி : வருத்தங்கள் இடம் மாறி விட்டன.

வீரன் 2: (வீரன் 1 இடம்) உன் கூட்டாளிகள் யார் சொல்.

வீரன் 1: யாருமில்லை.

கைதி : கைதிகளிடமிருந்து வேறு பதில் வராது.

வீரன் 1: மரண நினைவு மூச்சடைக்கிறது.

வீரன் 3: உயிர் வாழ்ந்து நீ எதையும் சாதிக்கப் போவதில்லை.

வீரன் 1: உனக்கு எதிராகவும் இதே வார்த்தைகள் விரைவில் எதிரொலிக்கலாம்.
(வீரன் 1, வீரன் 2, வீரன் 3, வீரன் 4, கைதி ஆகியோர் ஆக்ரோஷமாகப் பேசிக் கொள்கிறார்கள். பேச்சொலி கேட்பதில்லை.
(பகுதி 3-ல் குமார் மெல்ல நொண்டி நொண்டி நடக்கிறான். முன்னே நடந்து வருகிறான். நடுவரின் திசை நோக்கி மேலே பார்க்கிறான்).

குமார் : (நடுவரை நோக்கி) உங்கள் தீர்மானங்கள் தோல்வி அடையலாம்.

நடுவரின் குரல் : ஆட்டம் அதன் முடிவை நோக்கித்தான் போகும்.

குமார் : ஆயினும் எதிராளி கர்வமாய் வெற்றி பெற இயலாது.

நடுவரின் குரல் : ஆட்டம், பாதுகாப்பை மறுப்பது.

குமார் : என் கால் ஒத்துழைக்கவில்லை நான் ஆட்டத்திலிருந்து விலகிக் கொள்கிறேன். நான், தீர்மானம் மேற்கொள்கிறேன்.

நடுவரின் குரல் : திரு. குமார் ஆட்டத்திலிருந்து விலகிக் கொண்டதால், திரு. வினோத் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்படுகிறார்.
(குமார், நொண்டியபடியே, மெல்ல மேடையிலிருந்து வெளியேறுகிறான்.
பகுதி 1-ல் ஆணும் பெண்ணும் பேசிக் கொள்வது ஒலியாகக் கேட்கிறது.)

ஆண் : (பெண்ணிடம்) என்னோடு நீ வாழ இணங்காவிட்டால் உன் வேலைக்கு நான் உத்திரவாதமல்ல.

பெண் : (ஆணிடம்) மாறும் ஆட்ட விதிகள்

ஆண் : வாழ்க்கை முழுக்க நீ வருந்த நேரிடலாம்.

பெண் : என்னைச் சார்ந்திருக்கும் என் பெரிய குடும்பம்......

ஆண் : அதற்காகத்தான் சொல்கிறேன்.

பெண் : எனக்கு வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை.
(சிறிது நேரம் அமைதி நிலவுகிறது.)

ஆண் : (dictate செய்தபடி) மூடப்பட்ட பாதையே வாழ்வு.

பெண் : (டைப் அடித்தபடி) திரும்பி நடத்தல் சாத்தியமில்லை.

ஆண் : (பெண்ணிடம்) உன் முகம் என்னை உயிர்ப்பிக்கும்.

பெண் : (டைப் அடித்தபடி) என் சவத்திற்கு அழுகை வராது.

ஆண் : (பெண்ணிடம்) நான் சொல்வதை மட்டும் டைப் அடி.

பெண் : (டைப் அடித்தபடி) சவமும் கீழ்ப்படியும்......
(சற்று மௌனம்)

ஆண் : (dictate செய்தபடி) ஆட்டம் முடிந்து விட்டது. ஆடியவர்......

பெண் : (டைப் அடித்தபடி) ஆடியவர் காலொடிந்து ஒதுங்கிவிட்டார்.

ஆண் : ஆடியவர் வென்றுவிட்டார்.

பெண் : ஆட்டம்......

ஆண் : பரபரப்பானது......

பெண் : உயிரை உள் வாங்குவது......

ஆண் : ஏற்றமும் இறக்கமும் கொண்டது......

பெண் : இறுதியில் முடிவை நோக்கி முன்னேறியது......

ஆண் : ஆடப்பட்ட திருப்தியை நிறைவேற்றியது......

பெண் : ஒடிந்த காலாய் உருமாறியது......
(பகுதி 1-ல் ஆணும் பெண்ணும் பேசிக் கொள்ளும் ஒலி கேட்கவில்லை.
பகுதி 2-ல் வீரர்கள் பேசிக் கொள்வது ஒலியாகக் கேட்கிறது.)

வீரன் 4: (வீரன் 1 இடம்) உன் குறிக்கோளை முடிவு செய்து கொள்.

வீரன் 1: முடிவு செய்து கொண்டு விட்டேன்.

கைதி : கைதிகள் முடிவற்று இருப்பதில்லை.

வீரன் 2: (வீரன் 1 இடம்) நீ வாழும் சூழல் எப்படி மாறப் போகிறது தெரியுமா?

வீரன் 1: தெரியும்.

வீரன் 3: நாங்கள் எப்படிப்பட்ட உலகில் வாழப் போகிறோம், தெரியுமா?

வீரன் 1: தெரியும்.

வீரன் 4: எப்படி?

வீரன் 1: நீங்கள், நான் இல்லாத உலகில் வாழப் போகிறீர்கள்.
(துப்பாக்கிச் சத்தம் கேட்கிறது. வீரன் 1, மல்லாந்து முன்னே விழுகிறான். அவன் முதுகில் இரத்தம் சொட்டுகிறது. சிறிது அமைதி நிலவுகிறது.

வீரன் 1 ஐ, மற்ற வீரர்களும், கைதியும் தூக்கிக் கொண்டு வெளியேறு கிறார்கள். சிறிது அமைதி நிலவுகிறது.
பகுதி 1-ல் ஆணும் பெண்ணும் பேசிக் கொள்வது ஒலியாய்க் கேட்கிறது.

ஆண் : (dictate செய்தபடி) விசாரணையின் போது மரணம் நிகழ்வது ஆச்சர்ய மல்ல......

பெண் : (டைப் அடித்தபடி) ஆச்சர்யமல்ல......

ஆண் : இது வரை சில மரணங்கள் நிகழ்ந்துள்ளன.

பெண் : ......சில நிகழ்ந்துள்ளன.

ஆண் : அதிகார பூர்வமாக அடையாளங்கள் அறிவிக்கப்படவில்லை......

பெண் : ......அடையாளங்கள் அறிவிக்கப்படுவதில்லை.

ஆண் : படவில்லை.

பெண் : படவில்லை.

ஆண் : ஆட்டம் முடிந்து விட்டது. ஆட்சியாளர்கள் மாறிவிட்டார்கள். அடிமை களும்

பெண் : ......மாறிவிட்டார்கள்.

ஆண் : வாழ்வு தொடரக்கூடும்.

பெண் : தொடரக்கூடும்.

ஆண் : புதுப் பொலிவோடு என்ற எதிர்பார்ப்பில்......

பெண் : ......எதிர்பார்ப்பில்......எனினும் (ஆணிடம்) இறுதிச் சொட்டு இரத்தம் என்னுள் மிஞ்சுமா?......

ஆண் : (பெண்ணிடம்) டைப் அடி......

பெண் : (ஆணிடம்) சாத்தியமா?

ஆண் : (பெண்ணிடம்) டைப் அடி ...... (dictate செய்தபடி) இப்பொழுது எதுவும் சொல்வதற்கில்லை......

பெண் : (டைப் அடித்தபடி) ......சொல்வதற்கில்லை.

ஆண் : நிகழ்வுகள் நிகழ்வதும், நிகழாமல் போவதும்......

பெண் : நிகழாமல் போவதும்......

ஆண் : அவற்றில் முக்கியத்துவம் எதுவும் இருப்பதும், இல்லாததும்......

பெண் : இல்லாததும்......

ஆண் : தற்பொழுது எதுவும் இல்லை. பரிமாறிக் கொள்ள ஏதாவது தென்படலாம் பின்னால்......

பெண் : பின்னால்?

ஆண் : பின்னால்......நிச்சயமாய்......

பெண் : பரிமாறிக் கொள்ள எதுவுமேயற்ற உலகிலேயே வாழ்கிறோம் நாம்.........

ஆண் : (பெண்ணிடம்) புதிதாய் எதுவும் சேர்க்காதே......நான் சொல்வதை மட்டுமே டைப் அடி......

பெண் : (டைப் அடித்தபடி) சரி......

ஆண் (dictate செய்தபடி) நிச்சயமாய் தென்படலாம் பின்னால்......

பெண் : (டைப் அடித்தபடி) பின்னால்......
(பகுதி 1-ல் ஒளி குறைந்து இருளாகிறது.
பகுதி 2லும் பகுதி 3லும் ஒளி நிலைத்து இருக்கிறது.)

ஆண் குரல் : (dictate செய்தபடி) வெற்றிடம் வெகு காலம் நிலைக்காது.

பெண் குரல் : (டைப் அடித்தபடி) நிலைக்காது......

ஆண் குரல் : எப்படியும் காட்சிகள் அரங்கேறும்......அசைவுகள் கொண்டு பொருள் பரப்பும்......

பெண் குரல் : பரப்பும்......
(டைப் அடிக்கிற ஒலி மட்டும் இரண்டு நிமிட நேரம் நீடிக்கிறது..........
மெல்ல பகுதி 2, பகுதி 3, உட்பட முழு மேடையும் இருளாகிறது).

O O O

## நாட்டுப்புற நாடகம் என்னுடைய பார்வையில்

சந்திரசேகர கம்பார்

கர்நாடக நாட்டுப்புற நாடகம் பற்றியும், எனக்கும் என் மக்களுக்கும் அது எந்த வகையில் தொடர்புடையது என்பது பற்றியும் நான் எழுதுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டேன். நாட்டுப்புறப் பாடல்களையும் நாடக வடிவங்களையும் பயன் படுத்துபவன் என்ற முறையில் என்னுடைய கருத்துக்களை முறையாகவோ, தொகுத்தோ கூறுவதென்பது சுலபமான அதே சமயத்தில் கடினமான வேலை. அது ஒரு படித்த விமர்சகரின் வேலை என்று நினைக்கிறேன். என்னால் அதை செய்ய முடியாது. நான் செய்யவும் விரும்பவில்லை. இந்தக் கட்டுரையில் என்னு டைய நோக்கம் நாட்டுப்புற நாடகம் என்று அறியப்படுகிற ஒன்றுடன் என்னுடைய தொடர்பை பதிவு செய்வதுதான். அப்படிப்பட்ட ஒரு முயற்சி நாட்டுப்புற நாடகம் பற்றிய என்னுடைய பார்வையையும், எனக்கும், என்னுடைய காலத்துக்கும், என் னுடைய மக்களுக்கும் அதன் தொடர்பையும் உள்ளடக்கியதாக இருக்கும்.

நான் உடனடியான தொடர்பிலிருந்து தொடங்குகிறேன். நான் பூகோள ரீதியாக ஒரு கிராமத்தைச் சேர்ந்தவன். சமூக ரீதியாக ஒரு அழுத்தப்பட்ட, படிப்பறிவில்லாத வகுப்பைச் சேர்ந்தவன். அதனால் சுலபமாக நான் ஒரு நாட்டுப் புற மனிதன். ஏனென்றால் நான் வேறு யாராகவும் இருக்க முடியாது (நான் இதை ஏன் வலியுறுத்துகிறேன் என்றால் கடந்த பத்து வருடங்களாக படித்த நகர்ப் புற வர்க்கத்திற்கு இந்த நாட்டுப்புறத் தன்மை ஒரு 'உரிய' விஷயமாக இருக் கிறது.) நான் எழுதிய முதல் நீண்ட கவிதை 'ஹெலதீனகேலா' முழுவதும் என்னு டைய மண்ணிலிருந்து பெறப்பட்டது. 25 வருடங்களுக்குப் பிறகு நான் அதைப் பார்க்கும் போது என்னுடைய பெரும்பாலான எழுத்துக்கள் உள்ளடக்கத்தில் அந்த நீண்ட கவிதையுடன் தொடர்புடையதாகவே இருக்கின்றன. இவற்றை ஒரே மாதிரியான உள்ளடக்க முயற்சிகள் என்றோ, படைப்புத்திறன் காலாவதி ஆகி விட்டது என்றோ எடுத்துக் கொள்ளக்கூடாது. ஹெலதீனகேலாவில் வெளிப்பட்ட அனுபவச் செறிவும் முழுமையும் ஒரு கலைஞனின் பலதரப்பட்ட தேவைகளுக்கேற்ற மற்றும் என்னுடைய மக்களின் படைப்பு சக்திக்கான உந்துதல்களை வடிவமைக்கத் தேவையான அடிப்படைகளையும், அணுகு முறைகளையும் அளித்திருக்கின்றன. ஹெலதீனகேலாவை உருவாக்கிய நாட்டுப்புற ஊடகம் தான் சங்க்யா பால்யா, ஜோகுமாரசாமி மற்றும் என்னுடைய பிற நாடகங்களையும் சாத்தியமாக்கியது என்பதை நான் உறுதியாகக் கூற முடியும். நான் ஒரு முழுமையான கலையைக் கையாள்கிறேன் என்பதுதான் என்னை இவ்வளவு காலம் ஏன் இனிமேலும் நிலை நிறுத்தும் என்று எனக்குத் தோன்றுகிறது.

20ம் நூற்றாண்டின் இறுதியில் இப்படிப்பட்ட ஒரு அறிவிப்பு, விவாதத்தை உருவாக்கும் என்பதை நான் உணர்கிறேன். அதனால் இதை விளக்கமாகச் சொல்ல விரும்புகிறேன். எளிமையாக ஆரம்பிப்பதென்றால் என்னைப் பொறுத்தவரை கால அட்டவணை என்பது சிந்தனை மாற்றத்தைக் குறிக்கும் குறியீடு அல்ல. ஒரு அனுபவத்தின் தன்மை மக்களின் கற்பனை மற்றும் உணர்வு ரீதியான தேவைகளைப் பொறுத்தே நுட்பமாக உணரப்படுகிறது. அந்த அனுபவத்தின் சாசுவதத் தன்மையும், அது உருவாக்கும் கலை அம்சமும் மக்களின் சமூக கலாச்சாரத் தேவைகள், கோபதாபங்கள். பிரச்னைகள், கொந்தளிப்புகள் இவைகளைக் கொண்டே தீர்மானமாகிறது. தன்னுடைய படைப்பு சக்தியை மக்களிடமிருந்து பெறும் கலைஞன் அவைகளை வடிவமைத்து உரிய முறையில் தொடர்புபடுத்துகிறான். என்னுடைய மக்கள் இன்றும் நில உடமைச் சமூக மதிப்பீடுகளிலும், பழங்கால கட்டுமானங்களிலுமே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மை. நான் அதற்காக வருத்தப்படவோ, விமர்சிக்கவோ இல்லை. ஒரு கலைஞன் யதார்த்தத்தை களனாகக் கொள்ளும் போது தன்னுள்ளும், தன்னுடைய மக்களிடத்திலும், அவர்களுடைய தொடர்புகளிலும் சில மாற்றங்களை விளைவிக்க முடியும். அவனுக்கு சந்தர்ப்பம் கிடைக்கும் போது சில சமயங்களில் கட்டுமானங்கள், அடிமனக் குரல்கள், பழைய உருவகங்கள், குறியீடுகள் போன்ற மிக அடிப்படையான வலிமை வாய்ந்தவைகளை அவன் எடுத்துக்கொள்கிறான். அப்போது சமகாலத் தன்மை போன்ற விஷயங்கள் அவன் இயங்கும் தளத்தில் எழுவதில்லை. உதாரணமாக நான் ஹெலதீன கேலாவில் வளமை, ஆண்மைக் குறைவு, வறட்சி இவைகளைப் பற்றி சொல்ல ஆரம்பித்து என்னுடைய எல்லாப் படைப்புகளிலும் அந்த விஷயங்களையே எடுத்துக் கொண்டேன். டி.எஸ். எலியட், யீட்ஸ் போன்ற மேற்கத்திய நகர்ப்புறக் கலாச்சார மற்றும் நவீன இலக்கியக் காவலர்களும் இந்த விஷயங்களையே தங்கள் படைப்புகளின் மையமாகக் கொண்டிருந்தார்கள். ஆனால் நான் என்னுடைய கிராமத்திலிருந்துதான் விஷயங்களை எடுக்கிறேன். எலியட்டிடமிருந்தோ, யீட்ஸிடமிருந்தோ அல்ல. நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால் சில அடிப்படையான மனித நிலைமைகள் இடம், காலம் இவற்றுக்கு உட்பட்டும், இவற்றைக் கடந்தும் உத்வேகமும், ஆதிக்கமும் செலுத்துகின்றன.

முழுமை என்பதை நான் இன்னொரு விதமாகவும் பார்க்கிறேன். மனித சமூகம் பல்வேறு நிலைகளைக் கடந்திருக்கிறது அல்லது பல்வேறு நிலைகளில் வெளிப்படுகிறது என்று ஒருவர் சொல்லலாம். ஆனால் சில சமுகங்களில் பல்வேறு காரணங்களால் வாழ்க்கைத் தரம் கட்டுப்பட்டதாக, உணர்வு ரீதியாகவும், பாலியல் ரீதியாகவும் அமுக்கப்பட்டதாக இருக்கிறது. கட்டுப்பாடுகள் விலக்கப்பட்ட இடமாக இருப்பது மதம் ஒன்றுதான். அப்படிப்பட்ட சமூகங்களில் பொதுவாக ஒடுக்கப்பட்ட ஒரு மனிதர் தன்னுடைய தளைகளிலிருந்து வெளிப்படுவது மதம் அனுமதிக்கிற தருணங்களில்தான். மதச் சடங்குகளுடன் இணைந்த அதீத நடவடிக்கைகளின் பின்னணி இதுதான். மனித முயற்சிகளை மீறிய விளையாட்டுகள்

சுய பலியிடுதல்கள், பாலியல் வெளிப்பாடுகள் இவை இத்தகைய அதீத நடவடிக்கை களில் அடங்கும். சுருக்கமாகச் சொன்னால் இத்தகைய வெளிப்பாடுகள் அந்த சமூகங்கள் தங்களை இருத்திக் கொள்ளவும். நிலை நிறுத்திக் கொள்ளவும் அத்தியா வசியமானவையாக இருக்கின்றன. இன்னும் மேல் நோக்கிப் பார்க்கும் போது வாழ்க்கைத் தளங்களில் தென்படும் வேறுபாடுகள் சகஜமான வாழ்க்கை மற்றும் மதச் சடங்குகளில் பங்கு கொள்ளுதல் இவற்றுக்கு இடையிலான வேறுபாட்டைப் போன்றே தெளிவாகவும், முழுமையாகவும் இருக்கின்றன. இவ்வாறான தெளி வான வறையறையினால்தான் இத்தகைய சமூகங்களின் பொழுது போக்கு வெளிப் பாடுகள் மிக நுண்மையான முழுமையான குணாம்சத்தைப் பெறுகின்றன. வெளிப் படையாக உணரப்படுகிற எல்லாத் தேவைகளையும், உந்துதல்களையும் பிரதி பலிப்பதால் இவை நுட்பமானவை ஆகின்றன. இவ்வாறு அது தீவிரத்தன்மையும் ஒட்டு மொத்த தன்மையும் ஒருங்கே இணைந்ததாக இருக்கிறது. நாட்டுப்புற நாடகம் இதனால் நடனம், நாடகத் தன்மை, கத சொல்லுதல், பாடல், பாலியல் தன்மை, மரணம், மதம் எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக இருக்கிறது இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் நடிகர்கள் மட்டுமல்லாமல் நாடகம் பார்க் கும் பார்வையாளர்களும் வெளி உலகத்துக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்கிறார் கள். பார்வையாளர்கள் நாட்டுப்புற நாடகத்தில் இவ்வாறு பங்கேற்கிறார்கள். உண்மையில் நடிகர்களும் பார்வையாளர்களும் நாடகம் என்ற வடிவில் இறுதியில் மதச் சடங்காகிப் போகிற காரியத்தில் இணைந்த பங்கேற்பாளர்களாகிறார்கள். நீண்ட பயாலதா நாடகம் பிரார்த்தனையுடன் ஆரம்பித்து நடிகர்களும், பார்வை யாளர்களும் விடியற்காலையில் கோவிலுக்குப் போவதுடன் முடிகிறது. இப்படிப் பட்ட பின்னணியில் பாடல்கள் மற்றும் நடனங்கள் குறித்த விமர்சனங்கள் பொருத்த மற்றவை ஆகின்றன. இத்தகைய விமர்சனங்கள் மேற்சொன்ன சமூகங்களிலிருந்து மாறுபட்ட பொழுது போக்கு என்பது வேறு வகையில் செயல்படுகிற சமூகங்களி லிருந்து எழுபவை. நவீன சமூகம் என்று சொல்லப்படுகிற ஒரு சமூகத்தில் அறிந்தோ, அறியாமலோ ஒருவித மதம் சாராத தன்மை நிலவுகிறது. மனிதனு டைய வாழ்க்கையின் பெரும்பான்மை முக்கிய நிகழ்வுகள் எல்லாம் மதம் சார்ந்த அமைப்பிலிருந்து விடுபட்டவையாகத்தான் இருக்கின்றன. மதம் தாக்கம் செலுத்து கிற பகுதிகள் குறைந்து கொண்டே போய் மதம் என்பது சமூகம் அங்கீகரிக்கிற சில பகுதிகளில் செயல்படுகிற தொழிலாகிவிடுகிறது. நடனம், நாடகம், பாடல் எல்லாம் சமூகத்தில் பரந்து சிதறிப்போய் ஒன்றுடன் ஒன்று விடுபட்டுவிடுகின்றன. ஒரு லண்டன் நகரவாசி நடனம், நாட்டியம், நாடகம், மதம் எல்லாவற்றையும் தனித்தனியாகப் பார்க்கிறான். என்னுடைய கிராமத்து மனிதனுக்கு எல்லாவற் றையும் இணைத்துப் பார்க்க வேண்டும். எளிமையாகச் சொன்னால் இப்ஸன் என்னுடைய கிராமத்துக்கு சாத்தியமற்றவன்- சாத்தியப்பட வேண்டாம் என்று கூடச் சொல்வேன்.

நான் இதை வேறுவிதமாக விளக்க முற்படுகிறேன். ஓரளவுக்கு நியாயமான விமர்சனம் அடிக்கடி முன் வைக்கப்படுகிறது. அதாவது நம்முடைய நாடகம் சங்கீதம், நடனம், கவிதை மூலம் செயலை பின்னுக்கு தள்ளி, விஷயத்தை நீர்த்துப் போகச் செய்து ஒருவித தப்பியோடும் தன்மை கொண்டிருக்கிறது என்பது. இத் தகைய விமர்சனம் நம்முடைய மதம் சாராத நாடகங்கள் மற்றும் சினிமாக்களின் மீது முன் வைக்கப்படும்போது ஓரளவுக்கு சரியானதாக இருக்கலாம். ஆனால் நாட்டுப்புற நாடகத்துக்கு இது பொருந்தாது. ஏற்கனவே தெளிவாக்கியிருப்பது போல் நாட்டுப்புற நாடகத்தில் பொழுது போக்கு அம்சம் என்பது முக்கியமாக இயற்கையை சரிக்கட்டும் போக்கு. அங்கேதான் சமுக, கலாச்சார கட்டுப்பாடு களால் வாழ்க்கையில் பல விதங்களிலும் ஒடுக்கப்பட்ட மனிதன் தன்னுடைய வாழ் வியல் பிரச்சனைகளைத் தாண்டி தன்னை ஒரு முழுமனிதனாகப் பார்க்கிறான். எந்த மத அமைப்புக்குள் இந்த விடுதலையும், பூரணத்துவமும் நிகழ்கிறதோ, அது அவனுடைய மிக நுட்பமான மற்றும் நேரிடையான எல்லைகளைத் தாண்ட அவனுக்கு அனுமதி வழங்குகிறது. ஆனால் நகரவாசிக்கு (லண்டன் நகரவாசி) பொழுது போக்குக்கும், மதத்துக்கும் இடையேயும், பொழுதுபோக்கிற்குள்ளேயே பல்வேறு தர அடிப்படையிலும் தேர்வு சாத்தியப்படுகிறது. அவன் ஒரு சங்கீத நிகழ்ச்சி அல்லது ஆடையுரிப்பு நிகழ்ச்சியில் கலந்து கொண்டால், அது தப்பிக்கும் செயல். ஆனால் பயாலதாவில் பாடலோ, திரௌபதி துகிலுரிப்போ நிகழும் போது அந்த தாக்கம் வேறு வகைப்பட்டது. அது அடிப்படையில் மதம் சார்ந்த, சமன் செய்யும் போக்கு கொண்டது. தப்பித்தல் குணாம்சங்களும், நாட்டுப்புற அடையாளங்களும் ஒன்று போல் தோன்றுவது அமைப்பு ரீதியான ஒற்றுமையில் நேர்ந்த ஒரு விபத்துதான். இந்தத் தாக்க வேறுபாட்டை எதிர்கொள்ள ஒருவன் விழிப்புடன் இருக்க வேண்டும்.

நாட்டுப்புற நாடகத்தின் எதிர்காலம் என்னவாகும் என்று என்னைக் கேட் கிறார்கள். வரப்போகிற கம்ப்யூடர் மற்றும் கிரகப் போர் யுகத்துக்கு அது பொருந்த முடியுமா? நான் ஏற்கனவே சொன்னதைத்தான் திருப்பிச் சொல்ல வேண்டியிருக் கிறது. நாட்டுப்புற நாடகம் மொழியைப் போலவே எந்த சமயத்திலும் அதை உபயோகிப்பவர்களின் தேவைகளுக்கு ஏற்றவாறு இருக்கிறது. அதை உபயோகிப் பவர்கள் எந்த அளவுக்கு பொருத்தமானவர்களாக இருக்கிறார்களோ அந்த அளவுக்குந நாட்டுப்புற நாடகமும் பொருத்தமானதாக இருக்கும். வரலாற்றின் படிப்படியான மாறுதல்களுக்கு ஏற்ப அதுவும் எதிர்காலத்தில் உயிர் வாழும். ஏதாவது பிரளயம் ஏற்பட்டு அது உயிர்தரிக்காது போகலாம். ஆனால் அப்போது அதை உபயோகப்படுத்துபவர்களும் இருக்க மாட்டார்கள்.

— Sangeet Natak 1985

— தமிழாக்கம் : **ரெங்கராஜன்**

## 1. துக்கிரன் என்கிற ஆடு

கடைசித் தெருவின் கடைசி வீட்டில்
துக்கிரன் வாழ்கிறான் தெரியுமா
'வாடா முட்டாள்' என்றே அவனை
ஊரார் அழைப்பார் தெரியுமா.

ஆட்டைக் கண்டால் அவனுக்குக் கோபம்
அவனும் கூட ஆடுதான்
கோப சாபங்களைக் கொட்டும் ஜனங்களின்
இலக்காய் மாறிய ஆளுதான்

மௌனத்தையே மொழியாய் மாற்றி
பேசுகிறானே துக்கிரன்
பல்லைக் கடித்து அவமானத்தைச்
சகித்துக் கொள்கிறான் துக்கிரன்

நாட்டில் நடக்கும் தப்புகளுக்கு
அவனே ஏற்பான் பொறுப்பு
புதுசாய் ஒன்றைச் சொன்னால் போதும்
'தயார்' என உதிர்ப்பான் சிரிப்பு

குதிரையேறிய ராஜாவைப் போல
சுற்றி வந்தான் கனவில்
கூலிக்காரனாய் வேலைக்காகத்
திரிந்து வந்தான் நனவில்

கனவு நனவின் வித்தியாசங்கள்
மலைப்பும் எரிச்சலும் வளர்த்தன
''கடவுளை என்றும் மன்னிக்க மாட்டேன்''
என்றே வார்த்தைகள் சிதறின.

ஆனாலும் தனது தாடையை அசைத்து
மெதுவாய் துக்கிரன் பேசினான்
''பொல்லாத வாழ்வின் குற்றம் குறைகளை
மன்னித்துக் கொள்வாய் ஈசனே''

## 2. திரும்பி வந்த துக்கிரன்

பட்டணம் போன துக்கிரன் வந்தான்
தெரியுமா உங்களுக்கு விஷயம்
பளிச்சென உடுத்தி தொப்பி போட்டிருந்தான்
பூட்சில் தெரிந்தது முக பிம்பம்
கைகுலுக்கி நட்பைச் சம்பாதித்துக் கொண்டான்
ரொம்ப ரொம்ப புரிந்தது உலகம்
தூக்கிலேற்றுவதைக் கண்கூடாய்ப் பார்த்தானாம்.
தொட்டும் பார்த்தானாம் தூக்குக் கம்பம்
சிவனின் கண்ணிலும் மண்தூவித் திருடினான்
இங்க்லீசு போலீசை ஏமாற்றி
நரியான இவனுக்குச் சிங்கம் போல் வேட்டை
முந்தி நடந்த ரயில் திருட்டில்
காந்தியும் அறியாத போராட்டத் தந்திரத்தை
ஆஹா, வர்ணித்து வர்ணித்துப் பேசுவான்
புரட்சி, போராட்டம் ஏனேனோ சொல்கிறான்
இருந்தாலும் இருக்கும் அவன் பலே ஆசாமி.

○

## 3. தேசத்திற்குச் சில வார்த்தைகள்

பணக்கார மக்களைக் கண்போலக் காப்பாற்றும்
தேசமே இதைக் கொஞ்சம் கேளு.
ஏழைமேல் பார்வை திரும்பாத படிக்கு
மடக்கி வளைப்பார்கள் பாரு.
தினமும் உன்னைப் பரவசப்படுத்தி
பைத்தியம் போல ஆக்குவார்
சாப்பாட்டைப் பச்சைக் காகிதமாக்கி
மூச்சுத்திணற அருந்துவார்
மந்திரத்தாலே வாழ்க்கை முளைக்காது
பைத்தியத் தேசமே கேளு.
வா வெளியே இங்கு காற்று விளக்குண்டு
துக்கிரனும் உண்டு பாரு.

—சந்திர சேகர கம்பாரின் ‘துக்கிரனின் கனவு’
நாடகத்தில் வரும் பாடல்கள்

—தமிழாக்கம் : **பாவண்ணன்**

# டோக்ரி மொழி நாடக இலக்கியம் ஒரு அறிமுகம்

## சரஸ்வதி ராம்நாத்

டோக்ரி மொழி நாடக இலக்கிய வரலாறு சமீப காலத்தியது தான். இதற்கு புராதன பரம்பரை ஏதுமில்லை. நிறைய படைப்புகளும் இல்லை. இதுவரை கிட்டத் தட்ட 28 நாடகங்கள் நாடக மேடைகளிலும் நடிக்கத் தகுந்ததாய் வெளியாகியுள்ளன. இதற்கு பல காரணங்கள் உள்ளன. அச்சிட வசதி இல்லை. நாடக மேடைக்கு நல்ல ஆதரவோ, உற்சாகமோ அளிப்பவர்கள் இல்லை. மற்றும் நல்ல கிராமிய நாடகங்கள் கிட்டத்தட்ட அழிந்தே போய்விட்ட நிலை.

டோக்ரி மொழியின் முதல் நாடகம் அசூத் என்ற சிறு நாடகம். இதன் ஆசிரியர் ஸ்ரீ. விசுவநாத் கஜுரியா இதனை வெற்றிகரமான மேடை நாடகமாக நிகழ்த்தினார். இதன் பின், 13 ஆண்டுகளுக்குப் பிறகு 1948ல் பாவா ஜித்தோ என்றதொரு நாடகம், அரங்கத்தில் நடிக்கப்பட்டது. இதை ஸ்ரீ ராம்னாத் சாஸ்திரி ஏன்பவர் எழுதி இருந்தார். மேடையில் வெற்றி பெற்ற இந்நாடகம் பலரையும் கவர்ந்தது மட்டுமல்ல. நாடகம் எழுத வேண்டும் என்ற ஆவலையும் தூண்டியது. ஆயினும் இன்று வரை இந்நாடகம் அச்சாகி புத்தக வடிவில் வெளிவராமலேயே இருக்கிறது. 1957ல் மூன்று எழுத்தாளர் ஒன்றாக இணைந்து ஒரு நாடகத்தை உருவாக்கினார்கள். இதன் பெயர் 'புதிய கிராமம்'. இந்நாடகம் வெற்றிகரமாக பலமுறை அரங்கேற்றப்பட்டது. ஸ்ரீ டீனுபாயி, பந்த்', ராமநாத் சாஸ்திரி, மற்றும் ராம்குமார் அப்ரோப் ஆகிய மூவருமாய் எழுதியிருந்தனர். இதன்பின் குபர்டோ குதா கர்கே', யும் 1959ல் வேதராஹியின், 'தாரேன் தே அத்யரும்' ''ம்ஹாடோம் கே ஆன்ஸு' மற்றும் 1961ல் ஸ்ரீ ராம்குமார் அப்ரோப் எழுதிய 'தேஹ்ரி', சமாதி எனும் நாடகங்கள் வெளி வந்தன. கிராமியப் பின்னணியை கொண்டு எழுதப் பட்டிருந்த நாடகங்கள் என்பதைத் தவிர இந்நாடகங்களில் குறிப்பிடும்படியாக எதுவுமில்லை.

இதன் பின் 1966ல் டீனுபாயி 'பந்த்' எழுதிய 'சர்பஞ்ச்' (பஞ்சாயத்து தலைவர்) என்ற நாடகம் ஜம்மு பிரதேசத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இந்நாடகம் தான் டோக்ரி மொழியில் தரமான நாடகங்களுக்கு வித்திட்டது எனலாம். இந் நாடகத்திற்கு பிறகு நூல் வடிவத்தில் வெளி வந்த நாடகம். டோக்ரி நாடக இலக்கியத்திற்கே புதியதொரு சிந்தனைத் தடத்தைத் தோற்றுவித்தது. மனிதனுக்குள்ளே ஒளிந்திருக்கும் மிருகத்தை, சமுதாயத்தின் மதிப்பீடுகளை, வெளிச்சம் போட்டுக் காட்டிய நாடகம் ''ஜனொர்'' (மிருகம்) இந்நாடகத்தை எழுதியவர் புரொபசர் மதன் மோகன் சர்மா. தனது சிந்தனை மற்றும் பேனாவின் வலிமையால்

டோக்ரி இலக்கிய உலகில் புதியதொரு விழிப்பை உண்டாக்கினார். இந்நாடகம் விமர்சகர்களிடையே பலத்த சர்ச்சைக்குள்ளாகியது. 1970ல் எழுதப்பட்ட இந் நாடகத்திற்குப் பிறகு 1972ல் இன்னுமொரு நாடகாசிரியர் தோன்றினார். இவர் ஒன்றன் பின் ஒன்றாக மூன்று நாடகங்களை எழுதினார். நரசிங்க தேவ் ஜம்பால் எனும் இந்நாடகாசிரியர் 1972ல் ராஜா மண்ட லீக், 1975ல் ஆன்மரியாதா அல்ஹட் கோல்லி வீர்சிப்பாஹி' என்னும் மூன்று நாடகங்களை வெளியிட்டு தனது எழுத்தாற்றலை உணர்த்தினார். அல்ஹட் கோல்லி வீரசிபாஹி எனும் கவிதை நாடகம் டோக்ரி மொழியில் இது ஒன்றே ஒன்றுதான்.

1976ல் டௌந்தியா கந்தா-அதாவது 'விழும் சுவர்கள்' என்ற நாடகம் வெளி வந்தது. டோக்ரி மொழியின் பிரசித்தி பெற்ற கதாசிரியர் ஸ்ரீ ஹீரேந்திர கஜூரி யாவின் படைப்பு இது.

1979ல் புரொபசர் மதன் மோகன் சர்மா, ஏக் பர்சாமாம் பத்லிதா' (மேகத்தின் ஒரு நிழல்) எனும் நாடகத்தின் மூலம் மீண்டும் இலக்கிய உலகில் பரபரப்பையும், சர்ச்சையையும் தோற்றுவித்தார். எனினும் மேடை நாடகமாக இது வெற்றிபெற இயலவில்லை. நாடக மேடைக்கு தேவையான பல அம்சங்கள் இதில் நிறைவு பெற இயலவில்லை. இதுவே இதன் தோல்விக்கு காரணமாயிற்று. இதே ஆண்டில் ஓர் பெண் நாடகாசிரியர் களத்தில் தோன்றினார். திருமதி சாந்தா சர்மா — 'கசன்' என்ற புராணக் கதையை ஆதாரமாகக் கொண்டதொரு நாடகத்தை மக்களுக்கு அளித்தார். இந்நாடகம் நூல் வடிவம் பெற்றது. ஆனால் அரங்கத் திற்கு ஏற்றதாக இல்லை; ஆனால் இதே ஆண்டில் 'ஜீனே தீ கைத்' எனும் நாடகம் ஒரு வெற்றிகரமான மேடை நாடகமாய் திகழ்ந்தது. நாடக அபிமானிகள் பெரிதும் பாராட்டினார்கள். இந்நாடகத்தையும் ஸ்ரீ லலித் மங்கோத்ரா, ஸ்ரீசமன் அரேரோ எனும் இரு இளம் நாடகாசிரியர்கள் இணைந்து உருவாக்கியிருந்தனர்.

1982ல் 'காலாசூரஜ்' (கருப்பு சூரியன்) நூல் வடிவமாக வாசகர்களின் முன்னே வந்தது நூல் வடிவம் பெறும் முன்னரே இந்த நாடகம் நாடக மேடையில் பல முறை நடிக்கப்பட்டு பாராட்டுதல்களை பெற்றிருந்தது. 1984ல் தீனுபாயி 'பந்த்' கைகேயியை பிரதான பாத்திரமாக வைத்து 'அயோத்தி என்ற நாடகம் எழுதினார். எனினும் இது வெற்றிகரமான படைப்பாகக் கருதப்படவில்லை. நாடக அரங்கிற்கும் இது ஏற்றதாக இருக்கவில்லை. இதே ஆண்டில் நரசிங்தேவ் ஜம்பாலின் நாடக மான 'பிஞ்சரா' (கூண்டு) புதிய சமுதாயக் கண்ணோட்டத்தை உள்ளடக்கமாகக் கொண்டு வெளிவந்தது. அரங்கத்திலும் இது வெற்றி பெற்றது.

1988ல் இவர் எழுதிய 'சர்கார்' என்னும் சரித்திர நாடகம் பெற்ற பாராட்டுதல்களை அவரது இன்னொரு நாடகமான 'கட்வே கூண்ட்' பெறவில்லை. டோக்ரி மொழி யில் அதிகமான நாடகங்களை எழுதியவர் இவர்தான். 1985ல் ஜிதேந்திர

சர்மா என்பவர் நாடோடிக் கதைகளை ஆதாரமாகக் கொண்டு 'கூம்ஷ்ஜதாதி' என்ற நாடகம் எழுதியுள்ளார்.

1986ல் மோகன்சிங் மீண்டும் விமர்சகர்கள், பார்வையாளர்கள், இலக்கியவாதிகளின் பாரராட்டுதல்களைப் பெற்றார். இவரது நாடகமான 'பஞ்ச கல்யாணி' டோக்ரி மொழியின் மிகச் சிறந்த நாடகமாக தேர்ந்தெடுக்கப்படும் கௌரவத்தைப் பெற்றது. இந்நாடகத்தின் மொத்த பாத்திரங்கள் ஐந்து பேர்தான். இந்நாடகம் நூல் வடிவமாகவும் வெளிவந்துள்ளது. 1987ல் டோக்ரி மொழிக்கு வளம் கூட்டியது "ராமலீலா" எனும் நீண்டதொரு நாடகமாகும். இதுவும் ஸ்ரீ நரசிங்தேவ் ஜம்பாலின் படைப்புதான். மேடையில் இது மக்களின் கவனத்தை பெரிதும் கவர்ந்தது.

1988ல் இளம் நாடகாசிரியர் சிவதேவ் 'சுஷீல்'லின் பைஸ்லா (தீர்ப்பு) 1989ல் ரத்ன தோஷியின் 'கலியுகத்தின் பரமாத்மா' ராஜேந்திரசிங்கின் 'சச்சிமோதி' வெளிவந்துள்ளது, இதில் மூன்று நாடகங்கள் உள்ளன.

டோக்ரி மொழியில் நாடகத் துறையின் வளர்ச்சி கணிசமானதாக இல்லை. எனினும் நிராசையுறும்படியும் இல்லை. இத்துறை சமீபத்தில் பலரின் கவனத்தை கவர்ந்துள்ளதால் சிறந்த எதிர்காலம் உள்ளது. ஒரு விஷயம் இதில் கவனிக்கப்பட வேண்டும். டோக்ரி மொழியில் எண்ணிக்கையில் அதிகமான நாடகங்கள் வெளிவராவிடினும், மலிவான, மோசமான, தரமிழந்த நாடகங்கள் இல்லை. இதுவே ஆறுதல் அளிக்கக் கூடிய விஷயம்.

தற்சமயம், வீதி நாடகங்கள், மக்களைக் கவர்ந்து வருகின்றன. மக்களது அன்றாட வாழ்க்கைப் பிரச்சனை, அரசியல், சமுதாய சீர்கேடுகள் என பலவும் இவற்றில் அலசப்படுகின்றன. மக்களுக்கு புரியும் மொழியில், அவர்கள் மனதில் நேரிடையான பாதிப்பை இவை ஏற்படுத்தி வருகின்றன.

○ ○ ○

## இந்திய நாடகாசிரியர் வரிசை 5

## நாடகாசிரியர் அறிமுகம்

பெயர் : மோகன்சிங்

பிறந்த தேதி : 8—2—1955

பிறந்த ஊர் : ஜம்மு (கஷ்மீர்)

விலாசம் : 124, டோக்ராஹால், ஜம்மு—180001

## வெளியாகியுள்ள நூல்கள்

(1) அஸ்லோக்—கவிதை தொகுப்பு.
(2) காலா சூரஜ்—நாடகம்
(3) கடி (clock)—வசன காவியம்
(4) பஞ்ச கல்யாணி—நாடகம்
(5) அப்னி டப்லி அப்ணா ராக் — மூன்று நாடகங்களின் தொகுப்பு.

அச்சில் : நவ் ரங்க் ஏழு வண்ணங்கள் (ஒன்பது வீதி நாடகங்களின் தொகுப்பு)

பரிசுகள் : 1979—80 மற்றும் 1980—1981ல் ஜம்மு கஷ்மீர் கல்சரல் அகாதமியின் நடிப்பிற்கான பரிசு.

1984ல் ஜம்மு கஷ்மீர் கல்சரல் அகாதமியின் மிகச் சிறந்த நாடகம் என்ற பரிசு—கறுப்பு சூரியனுக்கு

டோக்ரி மொழியின் முதலாவது வீதி நாடகங்களை ஜம்மு கஷ்மீரில் துவக்கி ஸ்தாபித்தவர் என்று புகழ் இவருக்கு கிடைத்துள்ளது.

1970 லிருந்து நாடக மேடையுடன் தொடர்பு கொண்டுள்ளதால், ரேடியோ, மற்றும் தூரதர்ஷனுக்கும் பணியாற்றியுள்ளார். இதுவரை நாற்பது நாடகங்களில் நடித்த அனுபவம் உண்டு, 25 நாடகங்களை இயக்குனராக நின்று இயக்கியுள்ளார். ஜம்முகஷ்மீரின் மலை நாடுகள், எல்லையோரப் பிரதேசங்களிலும் சுமார் 500க்கு குறையாமல் விதி நாடகங்களை நிகழ்த்தியுள்ளார்.

ஜம்மு பல்கலைகழகத்தில் எம். ஏ பட்டப் படிப்பில் டோக்ரி மொழியில் பேகே என்ற தலைப்புக் கொண்ட இவரது ஓரங்க நாடகம் பாடமாக வைக்கப் பட்டுள்ளது.

டோக்ரி மொழியின் தலை சிறந்த கவிஞர்களின் கவிதைகளை இந்தி மொழியில் மொழிபெயர்த்துள்ளார்.

டோக்ரி மொழி நாடகம்

# கறுப்பு சூரியன்

மூல ஆசிரியர் : மோகன்சிங்

இந்தியில் : பத்மா சச்தேவ்

தமிழில் : சரஸ்வதி ராம்நாத்

**பாத்திரங்கள்**

1) மீரி. ஒன்று
2) தோலி இரண்டு
3) த்ரேலி மூன்று
4) ஃபாட்டீ faddy நான்கு
5) ஆடவன்
6) பெண்
7) நண்பன்
8) காம்ரேட்
9) லக்ஷிமி

மேடையின் இரு புறமிருந்தும் திரையின் மீது வட்ட வடிவமாக ஒளி படருகின்றது. ஒரு புறமிருந்து ஒரு ஆடவனும், மறு புறமிருந்து ஒரு பெண்ணும் மேடைக்குள் பிரவேசிக்கின்றனர்.

ஆண் : நமஸ்காரம்

பெண் : வந்தேமாதரம்

ஆண் : ரெட்சல்யூட்

பெண் : அதாப்

ஆண், பெண் இருவரும் மறைகின்றனர். ஒளியும் அணைந்துவிடுகிறது. திரை மெதுவாக விலகுகிறது. விலகுகின்ற இடத்தில் பாய்கின்ற ஒளி வட்டத்தினிடையே நிற்கும் நால்வர் மீது ஒளி விழுகின்றது.

முதலாமவன் : சோஷலிசம்—ஜிந்தாபாத்

இரண்டாமவன் : கம்யூனிசம்—ஜிந்தாபாத்

மூன்றாமவன் : காமன்லிசம்—ஜிந்தாபாத்

நான்காமவன் : காப்பிடலிசம்—ஜிந்தாபாத்

நால்வருமாக : ஜனதா ஜனார்த்தன்—ஹ—ஹாஹா...ஜிந்தாபாத்—ஹ—ஹா—ஹா—...

திரை விழுகின்றது. ஒளி அணைகின்றது. மேடையின் இருபுறமிருக்கும் விளக்குகள் ஒளிர்கின்றன.

ஆண்:ஜனதா ஜனார்தன்—ஜிந்தாபாத்

பெண் : தொழிலாளி, விவசாயி—ஜிந்தாபாத்

இருவருமாக : இந்தியக் கலாசாரம்—ஜிந்தாபாத்

ஆண் : ஜிந்தாபாத், ஜிந்தாபாத்...

பெண் : கோஷங்கள்-வெறும் கோஷங்கள் மட்டும்.

ஆண் : அர்த்தமற்ற கோஷங்கள். ஆதாரமற்ற கோஷங்கள்

பெண் : காந்தியவாதி

ஆண் : நக்ஸல்வாதி

பெண் : ஆதர்ஷவாதி

ஆண் : கலகக்காரன்

பெண் : நம்பிக்கையுள்ளவன்

ஆண் : வேடிக்கை செய்பவன்

பெண் : இந்தக் கட்சி, அந்தக் கட்சி

ஆண் : இந்தக் கட்சி, அந்தக் கட்சி

பெண் : எல்லோருமே ஏதோவொரு இனத்துடன் கட்சியுடன் தன்னை பிணைத்துக் கொண்டவர்கள்.

ஆண் : ஆனால் மனிதாபிமானவாதி எவரும் இல்லை. மனிதனாக இருந்தும், மனிதத்தன்மையுடன் எவரும் தன்னைப் பிணைத்துக் கொள்ள விரும்புவதில்லை.

பெண் : எல்லோரும் தங்கள், தங்கள் தனித்தன்மையுடன் ஏதாவதொரு மிருகத்தின் தன்மையையும் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். பலரும் ஓநாய்களைப் போல.

ஆண் : பலர் நாயைப் போல.

பெண் : பலர் பூனையை, குரங்குகளின் இயல்புடன்.

ஆண் : இதெல்லாம் பொருந்திவராதவர்களிடம் ஆந்தை வந்து குடியேறிக் கொள்கிறது. உற்றார் உறவினர்...

பெண் : அன்பு, காதல்.

ஆண் : பாசம், நாகரீகம்.

பெண் : தர்மம், நேர்மை.

ஆண் : இவை யாவுமே சில ரூபாய் நோட்டுக்களுடன் எடை போடப்படுகிறது.

பெண் : குரங்கு தராசில் எடை போடத் துவங்கியது.

ஆண் : நோட்டுகளுடன் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போய்விட்டது.

பெண் : நாய் முதலில் வாலை ஆட்டியது. பிறகு வொள் வொள் என்று குலைத்தது.

ஆண் : ஓநாய் உறுமியது. குரங்கு முஷ்டியை இறுக மூடிக்கொண்டு ஓடி விட்டது.

பெண் : நாய் வாலை ஆட்டுவதைக் கண்ட ஓநாய் ரொட்டித் துண்டுகளைப் போட்டது. பூனை சந்தர்ப்பத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தது.

ஆண் : ஆந்தை, ஆந்தையாகவேயிருந்தது. வாயைத் திறக்கவில்லை.

பெண் : வழிகாட்டிகள், செல்லும் பாதையை சுட்டிக் காட்டினர். ஆனால் எவரும் அவ்வழியே செல்லவில்லை.

ஆண் : சமூக சீர்திருத்தவாதிகள் சமுதாயத்தைச் சீர்திருத்தினர். ஆனால் சீர்திருந்தவில்லை.

பெண் : கீதையின் ஸ்லோகங்கள்

ஆண் : குரான்ஷரீப்

பெண் : குருவாணி

ஆண் : யேசுவின் உயிர் தியாகம்

பெண் : யாவுமே வெறும் வார்த்தைகளாக, வேறொரு உலகத்தைச் சேர்ந்தவையாகத் தோன்றுகின்றன.

பெண் : ஏனெப்படி? ராமனைப் போல் தந்தை சொல் மீறாத தனயன் இந்த உலகத்தில் தோன்றவில்லையா?

ஆண் : சீதையைப் போன்ற பதிவிரதை வேறொரு உலகத்தைச் சேர்ந்தவளா என்ன?

பெண் : ராஜா ஹரிசந்திரன் போன்ற சத்யவான் கற்பனைக் கதையின் பாத்திரமா என்ன?

ஆண் : ஆதம்மிற்கு அடுத்த தலைமுறையில் நடந்த போரில் ஆயுதங்கள் கற்களால் ஆனவை.

பெண் : அதன் பின் வந்தது வில்லும், அம்பும், வாளும், வேலும்.

ஆண் : இதன் பின் வந்துவிட்டன டாங்க், பீரங்கி, அணுகுண்டு, நைட்ரஜன் குண்டுகள்.

பெண் : புதிய புதிய சிந்தனைகள் தோன்றத் தோன்ற, போர் அறிவியலைச் சார்ந்ததாகி விட்டது.

ஆண் : அறிவு பூர்வமான சிந்தனையில் ஆராய்ச்சியில் ஈடுபடப்பட மனிதன் தன்னை மறந்து போனான்.

பெண் : சிந்தனை வளர்ந்து கொண்டே போயிற்று. செயல் வீழ்ச்சியை நோக்கிச் சரியலாயிற்று.

ஆண் : அதனுடைய வீழ்ச்சி இத்தனை வேகமானதாயிற்று. அதன் ஆதியையும், அந்தத்தையும் கண்டறிவது கடினமாகிவிட்டது.

பெண் : தனது செயல்களின் மூலம்தான் மனிதன் வாழ்கின்றான்.

பெண் : உயிர் வாழ்வதைவிட செயல்கள் மிக அவசியமானவை.

ஆண் : இன்று அதைப்பற்றிய கவலை எவருக்குமில்லை.

பெண் : மேடைப் பேச்சுகளிலும், பள்ளிப் பாட நூல்களிலும் தான் அச்சொல் உபயோகிக்கப்படுகிறது.

ஆண் : பிறர் மீது தன்னைப் பற்றியதொரு கணிப்பை ஏற்படுத்த ஏமாற்ற அச்சொல் பயன்படுத்தப்படுகிறது.

பெண் : மக்களுக்கு செயலாற்றுவது என்பது என்னவென்றே தெரியாதோ என்று எனக்குச் சந்தேகமாய் உள்ளது.

ஆண் : நமது பேசிக் காரெக்டர் காணாமல் போய்விட்டது. இதனால் எந்தவிதமான குற்றங்கள் மலிவதும் கடினமல்ல.

பெண் : நமது பேசிக் காரெக்டர் அழிந்து விட்டது. இதனால் நாம் அழிவது, மடிவது என்பது நிகழக் கூடியதாகத் தோன்றவில்லை.

ஆண் : நாம் நடமாடும் சடலங்கள்

பெண் : நாம் வெறுப்பினால் நிறைந்த விஷப்பாம்புகள்.

ஆண் : நாம் என்னவென்று நமக்கே தெரியாது. ஒருக்கால் நாம் ஒன்றுமேயில்லையோ என்னவோ.

(ஒளி அணைந்து விடுகிறது. திரை விலகுகிறது. ஆணும் பெண்ணும் திரைக்குப் பின்னே சென்றுவிடுகின்றனர். மேடையில் இப்பொழுது நால்வர் நிற்கின்றனர். மெல்ல மெல்ல ஒளி அவர்களின் மீது படிந்து பிரகாசமாகின்றது)

முதலாமவன் : நமது கோரிக்கைகள் ஏற்கப்படாவிட்டால் நாம் ஊர்வலம் நடத்துவோம். மறியல் செய்வோம்.

மூன்றாமவன் : பள்ளிகளை மூடச் செய்வோம். போஸ்டர்கள் ஒட்டுவோம்.

நான்காமவன் : கடை அடைப்பு செய்வோம். போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்வோம்.

முதலாமவன் : அப்பொழுதும் இணங்காவிடில் பட்டினி கிடப்போம், ஹர்த்தால் செய்வோம்.

மூன்றாமவன் : எங்களை கைது செய்யும்படியாக செய்வோம்.

நான்காமவன் : ஆர்பாட்டங்கள் நடத்துவோம்.

முதலாமவன் : சாகும் வரை உண்ணா விரதம் என முழங்குவோம்.

இரண்டாமவன் : (உரக்கச் சிரிக்கிறான்). முட்டாள்களே !

மற்ற மூவரும் : என்னது?

இரண்டாமவன் : நீங்கள் யாவரும் முட்டாள்கள், ஆந்தைகள். நீங்கள் என்ன நினைத்துக் கொண்டு இருக்

கிறீர்கள்? மாலைகள் போட்டுக் கொண்டு ஜெயிலை நிரப்புவதால், மறியல் செய்வதால், சாகும் வரை பட்டினி கிடப்பதால் உங்களுடைய கோரிக்கைகள் நிறைவேற்றப்படும் என நினைக்கிறீர்களா?

மூவரும் : ஏன் முடியாது? உயிரைத் துறக்க நேர்ந்தாலும் சரி. நாங்கள் தயார்.

இரண்டாமவன் : இந்த தியரிகள் எல்லாம் தியரிகளாக இருக்கட்டும். அதுதான் நல்லது. கோரிக்கைகளை நிறைவேற்ற உயிரைத் துறக்க வேண்டியதில்லை. உயிரைப் பறிக்க வேண்டும். எவ்ரி திங் ஈஸ் ஃபேர் இன் லவ் அண்ட் வார்.

மூவரும் : நாங்கள் அகிம்சா முறையில் போராட விரும்புகிறோம்.

மூன்றாமவன் : நாங்கள் அழிவை ஆதரிப்பவர்கள் இல்லை.

இரண்டாமவன் : நீ ஊர்வலம் நடத்தி, கோஷங்களை எழுப்பிக் கொண்டு போகும் போது போலீசார் உங்களை கலைப்பதற்காக தடியடிப் பிரயோகம் செய்கின்றனர். அந்நிலையில் எங்கே ஓடுவது என்று உனக்கு வழி ஏதும் தெரிவதில்லை. அந்நிலையில் நீ ஓடாமல் அடிகளைத் தாங்கிக் கொள்ள ஏன் நிற்பதில்லை. யார் காட்டிய பாதையில் அடியொற்றி நீ செல்ல விரும்புகிறாயோ, அவர் எத்தகைய அகிம்சாவாதி? தனது பெயர் பிரகாசிக்க எத்தனை பேர்களை அழிக்கின்றார்? தன்னைக் காப்பாற்றிக் கொள்ள பலரைப் பழியாக்குகிறார். பிறகென்ன? தான் அகிம்சாவாதி என்று நிலை நாட்டிக் கொள்கிறார். இதெல்லாம் ஃபீராட் வெறும் புரட்டு. ரெவல்யூஷன் வருவதென்றால் அது துப்பாக்கி முனையில் தான் வரமுடியும்.

முதலாமவன் : எங்களுக்கு போனஸ் வேண்டும். நேரான வழியில் கிடைத்தால் போதும். இந்தத் தொந்தரவுகளிளெல்லாம் மாட்டிக் கொள்ள வேண்டிய அவசியமென்ன?

இரண்டாமவன் : விரலை வளைக்காது நெய்யை எடுக்க முடியாது. நெய்யை எடுக்க வேண்டுமானால் விரலை வளைத்துத்தானாக வேண்டும். அவர்களது குரல்வளையைப் பிடிக்காமல் போனஸ், கீனஸ் எல்லாம் கிடைக்காது. அதற்காக ஒரு வழியை தேர்ந்தெடுக்கத்தான் வேண்டும்.

நான்கர்மவன் : சகோதரரே! இந்த வழியை உங்களிடமே வைத்துக் கொள்ளுங்கள். எங்களுக்கு அது தேவையில்லை.

மூன்றாமவன் : என்ன செய்ய வேண்டுமென்று எங்களுக்கு நன்றாகத் தெரியும்.

நான்காமவன் : எங்கள் காரியத்தில் குறுக்கிட வேண்டிய அவசியமில்லை, நாங்கள் செய்ய வேண்டிய காரியத்தில் .........

இரண்டாமவன் : ஹூம்.........நீங்கள் என்ன செய்து விடுவீர்கள்? நீங்கள் கோழை. பயந்தாங்குள்ளி. இல்லை யில்லை, டிப்ளமேட். இரண்டு பேச்சு. இரண்டு நாக்கு. இரண்டுமே பாம்பு, திருடனைப்பார்த்துத் திருடு, கொள்ளையடி என்கிறீர்கள். வீட்டில் உள்ளவர்களிடம் பத்திரமாக காவல் காத்துக் கொள்ளும்படி கூறுகிறீர்கள். நீங்கள் ஏஜண்ட்... தரகர்கள்.

நான்காமவன் : ஜாக்கிரதை. வாயைத் திறந்து இனி ஒரு வார்த்தை பேசினாலும் நாவைத் துண்டித்துவிடுவேன்.

மூன்றாமவன் : உயிரோடு புதைத்து விடுவேன்.

முதலாமவன் : இதென்ன! உங்களுக் குள்ளேயே சச்சரவிட்டுக் கொள்ள துவங்கிவிட்டீர்களே !

நான்காமவன்: உங்களுடைய அகிம்சை யெல்லாம் மற்றவர்களுக்கு கூறுவதற்கு மட்டும். உங்களுக்கு அல்ல.

முதலாமவன் : நண்பர்களே! இதென்ன சர்ச்சையில் இறங்கி விட்டீர்கள் .

நான்காமவன் : எங்களை இங்கு அழைத்து நீ எங்களை அவமதித்து விட்டாய்.

மூன்றாமவன் : மீட்டிங்கிற்கு இது மாதிரி ஆட்களை அழைப்பதானால் முத லிலேயே எங்களிடம் கூறிவிடு.

(மூன்றாமவனும், நான்காமவனும் பக்கவாட்டில் சென்று மறைகின்றனர். ஒளி மெல்ல மெல்ல மறைகின்றது. பின்னர் எதிர் பக்கத்திலிருக்கும் ஆண், பெண் இருவர் மீதும் படர் கின்றது. அவர்கள் மெதுவாக முன்னே நடந்து வருகின்றனர். முதலாமவ னும் இரண்டாமவனும் மற்றொரு புறம் இருட்டில் நிற்கின்றனர்)

ஆண் : எல்லா சாமான்களும் வீட்டிற்கே வந்து விடுகின்றன. ஆயினும் கடைத் தெருவிற்குச் செல்லும் ஆசையும் ஆர்வ மும் குறைவதில்லை. களைத்துப் போய் காரியாலயத்திலிருந்து வந்தால் மேம்சாகிபாவின் குதி பூட்ஸ்கள் பஜா ரில் சுற்றி வர பரபரக்கின்றன. நடந்து போக வேண்டிய நிலை வந்துவிட்ட தல்லவா? நான்கு மைல்கள்......

பெண் : வெளியே போக வேண்டும் என்று எனக்குத் தோன்றாதா? தினம் தினம் யார் போகிறார்கள்? ஆறு மாதத்திற்கொரு முறை ஒரு சுற்றுப் போய் வருகிறோம். அதிலும் முக்கிய மான வேலைகள் இருந்தால்......

ஆண் : ஓ......ஆமாம்... ..ஆமாம் ஆறு மாதத்திற்கு ஒரு முறை. தினமும் போய் வாயேன். யார் தடுக்கிறார்கள்? நானென்ன நாள் முழுவதும் வீட்டி லேயா உட்கார்ந்து கிடக்கிறேன், எனக்கு என்ன வந்தது என்று......

பெண் : உங்களுக்கு சண்டை போட ஏதாவது காரணம் வேண்டும். நீங்கள் ஆபீஸிற்குப் போன பிறகு நானென்ன கடை கடையாய் சுற்றிக் கொண்டிருக் கிறேனா? வீட்டு வேலைகளெல்லாம் வேறு யாரோ ஒருத்தி வந்து செய்து விட்டுப் போகிறாள் போலிருக்கிறது.

ஆண்: ரொம்பவும் அதிகமாய் பேசாதே. இரண்டு ரொட்டி தட்ட வேண்டும். அதற்கென்ன இவ்வளவு அலட்டல். வீட்டில் அப்படியென்ன காரியம் வெட்டி முறிக்கிறாய்?

பெண் : இரண்டு நாள் சமைத்துப் பார்த்தால் தெரியும். அம்மா போட்ட செவ்வெண்ணை வெளியே வந்து விடும். என்னால் உங்களுக்கு இத்தனை கஷ்டம் என்றால் கழுத்தை நெறித்து கொன்றுவிடுங்கள். தினம் தினம் இந்த ரோதனை ஒரு வழியாய் தீர்ந்து விடும்.

ஆண் : உயிருடன் இருந்தே நீ என்னை மூச்சுவிட விடமாட்டேன் என்கிறாய். செத்த பின் என்ன செய்வாயோ யார் கண்டது? பெரியதாய் பேச வந்துவிட் டாள். கடையிலிருந்து என்ன வேண் டுமோ, என்னிடம் சொல்லு நான் வாங்கி வந்து தருகிறேன் என்று எத் தனை முறை சொல்லியாகிவிட்டது. நீ கேட்பதில்லையே. நள்ளிரவாகப் போகி றது. தெருவில் மனித நடமாட்டத் தையே காணோம். ஆண் பிள்ளை தனி யாகப் போக வேண்டுமென்றால் அது வேறு விஷயம். பெண்களைக் கூட்டிக் கொண்டு போவதென்றால்! ஐந்து நிமி டத்தில் ஆக வேண்டிய காரியத்திற்கு ஏழு மணி நேரம் ஆகிவிடுகிறது. இப்பொ காலம் எப்படி இருக்கிறது? பட்ட பகலிலேயே இப்பொழுதெல்லாம்

உயிரைப் பற்றிய நம்பிக்கையில்லை. இப்பொழுது உன் வீட்டிலிருந்து யாரா வது வரட்டும்...கடை தெரு, வெளியே போவது எல்லாம் மறந்து விடுவாய்.

பெண் : நீங்கள் உங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொள்ளுங்கள் போதும்.

ஆண்—என்னைப் பற்றித்தான் எனக்கு கவலை. உனக்கென்ன! எது நடந்தா லும் அது என்னைத்தானே பாதிக்கும் உனக்கென்ன?இழப்பு எனக்குத்தானே!

பெண் : என்னுடன் வருவதற்கு இத் தனை பயமாக இருந்தால் நீங்கள் போகலாம். நான் தானே வந்து கொள் கிறேன்.

[சட்டென்று எழுந்து நின்று வியப்பும் கோபமும் மேலிட கூறுகிறான்.]

ஆண் : என்ன சொன்னாய்? நான் போகட்டுமா? இங்கே உன்னுடைய தோழன் எவன் காத்துக் கொண்டிருக் கிறான் உன்னை வீட்டில் கொண்டு போய்விட!

பெண் : ஏன் வாயைக் கிளறுகிறீர்கள்? உங்களுக்கு எல்லோரும் உங்களைப் போலத்தானே தெரிவார்கள்? என்னு டன் வர உங்களுக்கு பயமாக இருக்கிறது. தனியே போகிறேன் என் றாலும் சந்தேகப்படுகிறீர்கள். நான் சதி சாவித்திரி இல்லையென்றாலும் நீங்கள் எத்தனை உண்மையானவர் என்று நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்.

ஆண் : வாயாடாதே! வந்து விட்டாள் பெரிதாய் உபதேசம் பண்ண, இரண்டு அறை கொடுத்தால் திமிரெல்லாம் பறந்துவிடும்.

பெண் : உங்களால் வேறு என்ன செய்ய முடியும்?

ஆண் : வேண்டுமா? இரண்டு கொடுக் கட்டுமா?

ஆணும் பெண்ணும் மறைகின்றனர். அவர்கள் மீதுபடும் வெளிச்சம் மங்கலா கிறது. இப்பொழுது வெளிச்சம் முத லாமவன், இரண்டாமவன் மீது விழு கின்றது.

முதலாமவன் : சகல வஸ்துக்களும் இந்த உலகில்தான்!

இரண்டாமவன் : எட்டியதைவிட்டால் தப்ப மாட்டோம்!

முதலாமவன் : நான் சொல்லுகிறேன் நீ எழுந்திருடா!

இரண்டாமவன் : நான் சொல்லு கிறேன் நீ எழுந்திருடா!

இருவருமாய் : தொழில் துவங்கும் நேரமாகிவிட்டது போகலாம் ஒரு கை பார்த்து விடுவோம்.

என்றவாறே இருவரும் அந்த ஆணை யும் பெண்ணையும் சுற்றி வளைத்துக் கொள்கின்றனர். இருவரும் திகிலடை கின்றனர்.

முதலாமவன் : குருவி ஒரு வாய் குடிப்ப தால், ஆற்று நீர் குறைந்துவிடாது.

இரண்டாமவன் : செக்கச் சிவந்தவளே, பக்கிரி வாசலில் நிற்கிறான். உன் அழகைக் கொஞ்சம் தானமாகக் கொடுத்து விடு.

முதலாமவள் : நான் உன்னுடைய ரான்ஜாவாகிறேன். நீ என் ஹீரா வாகி விடு.

இருவருமாக : ஹோட்டலில் அறை புக் செய்கிறோம். வா போகலாம் கஷ்மீ ருக்கு.

பெண் விலகிச் செல்லச் செல்ல இருவ ரும் அவளைத் தொடருகின்றனர்.

முதலாமவன் : இரவு வேளை, தெருக் களிலே மயான அமைதி,

இரண்டாமவன் : இளமை நெடு நேரம் நீடிப்பதில்லை அழகியே!

முதலாமவன் : உன் இளமையை, அழகை ரசித்துணர்பவர்கள் நாங்கள்.

இரண்டாமவன் : அழகியே! எங்களுக்கு ஏன் நீ கனிவுடன் அதை அளிக்கக் கூடாது?

பெண் : இதென்ன இது! மரியாதை யில்லாமல்! நீங்கள் யார்?

(ஆணை நோக்கி) என்ன? விழித்துக் கொண்டு நிற்கிறீர்கள்! இவர்களை தடுக்காமல்?

ஆண் முன்னே வந்து அவர்களைப் பிடிக்க முயல்கின்றான். இருவரும் அவளைத் திரும்பிப் பார்க்கின்றனர்.

முதலாமவன் : அச்சா! நீங்கள் கூட வந்திருக்கிறீர்களா? வாருங்கள் இன்று இரவு எங்கள் விருந்து உபசாரத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் பெரியவரே!

இரண்டாமவன் : பொழுது விடிவதற்கு முன்னரே போய்விடுங்கள்.

ஆண் : ஷட் அப். மனிதத் தன்மை என்று ஒன்று இருக்கிறது தெரியுமா? நான் உங்களை போலீஸில் ஒப் படைத்துவிடுவேன் தெரியுமா!

முதலாமவனும், இரண்டாமவனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு உரக்கச் சிரிக்கின்றனர்.

ஆண் : எங்களைப் போன்ற கண்ணிய மானவர்களைத் தொந்தரவு செய்ய உங்களுக்கு வெட்கமாக இல்லை? உங் கள் வீட்டில் அக்கா, தங்கை, அம்மா இல்லையா?

முதலாமவன் : ஏனில்லை. அம்மா இருக்கிறாள். அக்கா தங்கை இருக் கிறார்கள்.

இரண்டாமவன் : ஆனால் பெண்டாட்டி இல்லை. இதனால்தான் இன்றைய இரவுக்கு மட்டும் கடனாகக் கேட்கி றோம்.

முதலாமவன் : நீயாக கொடுக்காவிட் டால், பிடுங்கிக் கொள்வோம்.

இருவருமாய் : பேசாமல் ஒப்புக்கொள் அண்ணே!

ஆண் : பொறுமைக்கும் ஒரு எல்லை இருக்கிறது—நான் வந்து......

இருவரும் மீண்டும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு உரக்கச் சிரிக்கின் றனர்.

பெண் : இதென்ன! இவர்களோடு பேசிக் கொண்டு! வாருங்கள் போக லாம்.

ஆண் நடக்கத் துவங்குகிறான். முத லாமவன், இரண்டாமவனை அவனுக் குப் பின்னால் போகும்படி ஜாடை காட்டுகிறான். பிறகு பெண்ணுக்குப் பின்னால் தான் நடக்கிறான்.

பெண் : என் பின்னால் வராதே! அங் கேயே எட்டி நில் இல்லாவிடில் நான்

ரொம்பவும் கெட்டவளாக இருப்பேன். [பெண் பின்னால் நகர நகர, முதலா மவன் முன்னால் வருகிறான்.]

பெண் : அங்கேயே நில், நான் சொல் கிறேன் நில் அப்படியே.

முதலாமவன் : நான் சொல்வதை நீ முதலில் கேள். உன் அழகைப் பார்த்து எனக்கு உன் மீது ஆசை உண்டாகி விட்டது.

ஆண் : ஜாக்கிரதை, அவள் மீது கை வைத்தால்—நான்......

பெண் : வழியில் போகிற என் மாதிரி அன்னியப் பெண்களிடம் இம்மாதிரி

தகாத முறையில் நடந்து கொள்வதற்கு உங்களுக்கு வெட்கமாய் இல்லையா? வெட்கம், மானம் ஏதுமேயில்லையா?

முதலாமவன் : யார் வெட்கப்படு கிறானோ அவன் காரியம் நடக்காது என்று நீ கேள்விப்பட்டதில்லையா? எங்கள் கைக்கெட்டியது கை தவறி விழுவதை நாங்கள் விரும்பவில்லை. வா...வந்துவிடு. நீயும் உன் வாழ்க் கையை அனுபவிக்கலாம்.

ஆண் : உன் குருதியை குடித்து விடு வேனடா! விடுடா என்னை. நான் சொல்லுகிறேன் விடு என்னை...

[இரண்டாமவன் ஆணின் வாயில் துணியை அடைக்கிறான்.]

பெண் : ஐயோ...எல்லோரும் பாருங்க ளேன்...இதென்ன அனர்த்தமாக—விப ரீதமாக இருக்கிறதே. (சபையோரைப் பார்த்து)

முதலாமவன் : உங்கள் முறையீடு களைக் காதில் வாங்கிக் கொள்ள, இங்கு யாருக்கும் நேரமில்லை. இத னால் கூக்குரலிட வேண்டிய அவசிய மில்லை. அது மட்டுமல்ல. இந்த வட்டாரத்தில் மனித குலத்தைச் சேர்ந்த எவரும் வசிக்கவில்லை. இந்த வட்டாரத்தில் நாங்கள்தான் எல்லாம். உன் அழகை ரசித்துக் கொண்டு உன் னைக் காதலித்துக் கொண்டிருக்கும் நாங்கள் தான் எல்லாம்.

பெண் : எனக்கு உன் காதல் தேவை யில்லை. உன்னை வேண்டிக் கொள் கிறேன். தயவு செய்து என்னை விட்டு விடு.

முதலாமவன் : ஆனால் எனக்கு உன் காதல் வேண்டுமே.

இரண்டாமவன் : ஏண்டா......என்னை மறந்துவிட்டாய் போலிருக்கிறதே......

முதலாமவன் : அடடே இந்த மாலை... தங்கச் சங்கிலி போல் இருக்கிறதே...... சொக்கத் தங்கம்.

பெண் : ஊஹும்......உன் பார்வை இதில் பட்டுவிட்டதா?

முதலாமவன் : இந்தக் காலத்துப் பெண்ணாக இருந்தும் இப்படிப் பழங் கால பாஷனில் இருக்கிறாயே—எனக்கு ரொம்ப ஆச்சர்யமாக இருக்கிறது. தங் கத்தின் பால் இந்த மோகம்—ஆசை— இதெல்லாம் வீண் செலவு...

பெண் : உன்னை ரொம்பவும் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என்னை விட்டு விடு.

முதலாமவன் : ஓ...இதென்ன! கையி லும் வளையல்களா? உன்னைப் போன்ற பெண்களை—துப்பாக்கியால் சுட்டுவிட வேண்டும். இந்த பூமிக்கு நீங்களெல்லாம் பாரம். இந்த வளை யல்கள், மாலை எல்லாவற்றையும் கழற்றி என்னிடம் கொடுத்து விடு. ஊம்.

பெண் : முடியாது. முடியவே முடியாது. இந்த நகைகள் எனக்கு உயிரைவிட மேலானவை.

ஆண் : இவை என்னுடைய நேர்மை யான சம்பாத்தியத்தில் வாங்கியவை. உன் அப்பன் வரதட்சணையாகக் கொடுக்கவில்லை.

முதலாமவன் : ஏய்?

இரண்டாமவன் : என்ன?

முதலாமவன் : நீ இன்னமும் இவரு டைய பாண்ட் பாக்கெட்டை சோதனை போடவில்லையா?

முதலாமவன் அப் பெண்ணிடம் வளை யல்களையும், மாலையையும் கழற்றித் தரும்படி ஜாடை காட்டுகிறான்.

அவளை நோக்கி அவன் முன்னே செல்லச் செல்ல அவள் பின் வாங்குகிறாள்.

இரண்டாமவன் : என்ன ஐயா! உங்கள் ஜேப்பில் பர்ஸ் இருக்கிறதா?

ஆண் : அதைப் பற்றி உனக்கென்ன?

இரண்டாமவன் : அதில் பைசா இருக்குமல்லவா! அதனால்தான்.

ஆண் : இருக்கும். இல்லாமலிருக்கும். அதைப்பற்றி உனக்கென்ன?

இரண்டாமவன் : நீங்கள் பைசாவை எல்லாம் எடுத்து என் ஜேப்பில் போட்டு விடுங்கள். பர்ஸை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். அவ்வளவுதான்.

ஆண் : எதற்காக?

இரண்டாமவன் : சரி போகட்டும். பர்ஸோடே கொடுத்துவிடுங்கள்.

ஆண் : உனக்கு கடன்பட்டிருக்கிறேனா என்ன?

இரண்டாமவன் : கடன் பட்டிருக்கிறீர்கள் என்று எப்பொழுது சொன்னேன்? நீங்கள், தானாகவே உங்களுடைய நேர்மையான சம்பாத்தியத்தை எனக்கு அளித்துவிட வேண்டும். மாதம் துவங்கி இருக்கிறது. முதல் வாரம். அதனால் தான் மனைவியோடு சுற்றிக் கொண்டிருக்கிறீர்கள்.

ஆண் : அதன் பலனைத்தான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

[முதலாமவன் அப்பெண்ணைப் பிடித்து சங்கிலியைக் கழற்ற முயற்சிக்கிறான்]

பெண் : அட பாவி, உனக்கு சாவு வர, என்னை விடுடா. உன் கை புழுத்துப் போக. நீ......

முதலாமவன் : நல்லதனமாக எத்தனையோ சொன்னேன். நீ கேட்கவில்லை. உன்னுடன் நாடகம் ஆட எனக்கு நேரமில்லை. எனக்கு மட்டுமென்ன, இந்த பாஸ்ட் லைப்பில் யாருக்கும் இத்தனை அவகாசமில்லை. அதனால்தான் பலத்தை பிரயோகிக்க வேண்டியுள்ளது.

பெண் : உன்னுடைய சாகசமெல்லாம் இங்கு பலிக்காது.

முதலாமவன் : ஏண்டா...எனக்கு சாகசமெல்லாம் பண்ணத் தெரியுமாடா! நீ சொல்லு.

இரண்டாமவன் : என்ன விஷயம்?

முதலாமவன் : இவளுக்கு நம் அன்பான வார்த்தைகளெல்லாம் புரியவில்லை.

இரண்டாமவன் : அச்சா! அப்போ பதிமூன்று அங்குல வஸ்துவை உருவிக் காட்ட வேண்டியதுதான்

முதலாமவன் : ஆமாம் அதுதான் சரி...

[இரண்டாமவன் ஜேபிலிருந்து கத்தியை எடுத்து அதைத் திறப்பது போல் பாவனை செய்கிறான். கத்தியை உருவுவது போன்ற ஒலியை எழுப்பிய வண்ணம் அதை ஆணின் கழுத்தின் மீது வைக்கிறான்]

பெண் : அடே—டே—என்னடா செய்கிறாய்?

முதலாமவன்: இப்போ-என்ன சொல்லுகிறாய் ராணி!

பெண் : வேண்டாம்—வேண்டாம்.

முதலாமவன் : தங்கத்தின் பளபளப்பு, குங்குமத்தின் சிவப்பைவிட பிரியமானது போலிருக்கிறது.

ஆண் : கொடுத்து விடுவது தானே! ஏன் மாட்டேன் என்கிறாய்? உன்னோடுகூட என்னுடைய உயிரையுமல்லவா ஆபத்தில் மாட்டியிருக்கிறாய்.

[ஆண் தன் ஜேபிலிருந்து பர்ஸை எடுத்து இரண்டாமவனிடம் நீட்டிய வாறே]

ஆண் : இந்தா! எடுத்துக் கொள் பர்ஸை. என்னை விட்டு விடு.

இரண்டாமவன் : பர்ஸை தங்களது மங்களகரமான கரங்களினால் என் ஜேபியில் போட்டுவிடு.

ஆண் : இந்தா...இனி என்னை

இரண்டாமவன் : இந்த கடிகாரம்......

ஆண் : ஹூம்... (கடிகாரத்தை கழற்றியவாறே) இந்தா, இதையும் வைத்துக் கொள். ஆனால் என்னை விட்டு விடு.

இரண்டாமவன் : இதென்ன! இவளை உன்னுடன் அழைத்துப் போக மாட்டாயா!

ஆண் : அவளையா......அவளை நீயே அழைத்துப் போ. நகைகளுடன் கூட. ஆனால் என்னை......

முதலாமவன், இரண்டாமவன் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக் கொள்கிறார்கள். பெண் திக்பிரமையடைந்தவளாய் விழித்துக் கொண்டு நிற்கிறாள்.

முதலாமவன் : கேட்டாயா! உன் பதி பரமேஷ்வர் என்ன சொல்கிறார் என்று.

[பெண் மௌனமாய் நிற்கிறாள். முதலாமவன் அவளது சங்கிலி வளையல்களைக் கழட்டிக் கொள்கிறான்.]

ஆண் : இனி என்னை விட்டு விடு.

இரண்டாமவன் : டேய்...

முதலாமவன் : என்ன?

இரண்டாமவன் : என்ன சொல்லுகிறாய்?

முதலாமவன் : விட்டு விடு - கெஞ்சுகிறான்.

இரண்டாமவன் : இல்லையடா, எவன் மானத்தைவிட உயிரைப் பெரிதென நினைக்கிறானோ அவனுக்கு உயிர் வாழ்வதற்கு உரிமையில்லை.

[இருவருமாய் ஆணை இழுத்துக் கொண்டு செல்லுகின்றனர்]

ஆண் : இப்பொழுது என்னிடம் எதுவுமில்லை. உங்களிடமிருந்து நான் எதையும் மறைக்கவில்லை. என்னிடம் இருந்ததையெல்லாம் உங்களிடம் ஒப்படைத்துவிட்டேன். இனி என்னை அனுப்பிவிடுங்கள்.

இரண்டாமவன் : உன்னை ஒரேயடியாய் அனுப்பிவிடப் போகிறேன். வா, இந்த இருண்ட இரவில் உன்னுடைய நெடும் பயணம் பற்றி எவருக்கும் தெரியப் போவதில்லை.

[ஆணை இழுத்துக் கொண்டு வெளியே போகிறான். சற்றைக்கெல்லாம் ஆணின் அலறல் கேட்கிறது]

முதலாமவன் : இவன் ரொம்பப் பிடிவாதக்காரன். எதை நினைக்கிறானோ அதை முடிக்காமல் விடமாட்டான். எத்தனை சொன்னாலும் பயனில்லை. கேட்க மாட்டான்.

பெண் : நீங்கள் இருவருமே ஒருவருக்கொருவர் குறைந்தவர்கள் அல்ல.

முதலாமவன் : ஹூம்......

[பெண் சட்டென்று தன்னை மாற்றிக் கொண்டு சிரித்துக் கொண்டே] நீங்கள் என்னை நேசிக்கிறீர்கள். இல்லையா?

முதலாமவன் : ஆம் ரொம்பவும் நேசிக்கிறேன்.

பெண் : அப்படியென்றால், என்னுடையது யாவும் உங்களுடையது. உங்களுடையது எல்லாம் என்னுடையது. இல்லையா?

முதலாமவன் : ஆமாம்.

பெண் : ஆனால், என்னுடைய அழகும், வனப்பும் இந்த நகைகள் இல்லாமல் வெறிச்சென்று போய்விடும். என்னை—

முதலாமவன் : (இடைமறித்து)—சீச்சீ ...சீ...ஒன்றுமே தெரியாத அப்பாவி, பேதைப் பெண் மாதிரி எப்படி நடிக்கிறாய்? உன்னை மாதிரி பெண்களைத் தான் தினம் தினம் நான் பார்க்கிறேன். கணவன் இறந்து விட்டானே என்று உனக்குக் கொஞ்சம்கூட வருத்தமில்லை. நகைகளைப் பற்றித்தான் கவலையெல்லாம். உன்னையும் உன் பதிபரமேஷ்வருடன் சதியாக்கி இருக்க வேண்டும்.

[பயந்தவளாய் பெண் பின்னால் நகருகிறாள்]

அப்பொழுது வரலாற்றில் புதிய அத்தியாயமொன்று துவங்கி இருக்கும். இன்றும்கூட—ஆனால் வேண்டாம். தெரிந்து கொண்டே உனக்கு ஊக்கம் தர நானொன்றும் முட்டாள் இல்லை. அவன்தான் முட்டாள், மண்டு, கழுதை எதையும் புரிந்து கொள்ளுவதில்லை. மடையன்.

இரண்டாமவன் வருகிறான்.

இரண்டாமவன் : யார் மடையன்?

முதலாமவன் : ஒருவருமில்லை.

இரண்டாமவன்: இனிப் புறப்படவேண்டும். தேவியாரே வாருங்கள். எங்களுடைய சேவையை ஏற்றுக் கொள்ளுங்கள்.

[மிலிடரி பூட்ஸ்களின் ஓசை கேட்கிறது. மூன்றாமவனும் நான்காமவனும் வருகின்றனர். இப்பொழுது போலீஸ் யூனிபாரத்தில் உள்ளனர். உடை அதே தான் தொப்பியும், கையில் பிரம்பும் இருந்தால் போதும். அவர்களைக் கண்டதும் முதலாமவனும், இரண்டாமவனும் நழுவப் பார்க்கின்றனர்.]

மூன்றாமவன் : அடே! எங்கேயடா போகிறீர்கள்? கூட இந்தப் பெண்... என்ன விஷயம்.........என்னடா கோல்மால்! இது யார்?

முதலாமவன் : (பயந்தவனாய்) இது வந்து என்னுடைய... இல்லையில்லை. இவனுடைய...இல்லை என்னுடைய... இது வந்து...

இரண்டாமவன் : (விஷயத்தை சமாளித்து) இவனுடைய மனைவி.

முதலாமவன் : ஆமாம் மனைவி. மனைவி அதாவது வைப்

மூன்றாமவன் : சரி சரி நான் கேட்கிற கேள்விகளுக்கு சரியாய் பதில் சொல். இந்த நேரத்தில் அகால வேளையில் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்! ஏதாவது சண்டை, சச்சரவா! அல்லது வேறேதாவது...விஷயமா?

முதலாமவன்: நீங்கள் இருக்கும் போது சண்டையாவது சச்சரவாவது! விஷயம் என்னவென்றால்—நான் சொல்லுவது ...அதாவது...

இரண்டாமவன் : எங்கள் வட்டாரத்திலே ரொம்ப நாய்களோட தொந்தரவு. எங்க தூக்கமே போய்விட்டது. அதனாலே நாங்க இரண்டு பேரும் எழுந்து இப்படியே நடக்கலாமே என்று கிளம்பினோம். ஆனால் இங்கு வந்தாலும் அதே நிலைமைதான். நாய்கள் எங்களை விடவேயில்லை.

முதலாமவன் : அதனால்தான் இனி எங்கே போகலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தோம்.

மூன்றாமவன் : ஹவல்தார்!

நான்காமவன் : எஸ் சார்!

மூன்றாமவன் : இவர்கள் சொல்வது எத்தனை நிஜம், எத்தனை பொய் என்று தீர விசாரித்துப் பார்க்க வேண்டும். எதையும் மறைக்காமல் தெளிவாக வெளிப்படையாகச் சொல்ல வேண்டும் என்பதுதான் என் பழக்கம் என்று இவர்களிடம் சொல்லிவிடு. ஒன்று முழு உண்மை. அல்லது பொய். இந்த இரண்டும் கலந்தது நமக்குப் பிடிக்காது.

நான்காமவன் : ஜனாப்...இந்த உண்மையை கண்டறிய வேண்டுமென்றால் ஸ்டேஷனில் போய் சோதனை போட்டால்தான் தெரியும். இந்த கேசு ரொம்ப சிக்கலாய்...ரொம்ப...

மூன்றாமவன் : ஹூம் நீ சொல்வதும் சரிதான். இதன் ரிப்போர்ட்டை ஸ்டேஷனில் பதிவு செய்யாமல் காரியம் நடக்காது. சட்டம் ஒழுங்கைக் காப்பாற்றுவதும் குற்றவாளியை கஸ்டடியில் வைப்பதும் நமது தலையாய கடமை. இருந்தாலும் இந்த வெற்று வெளி மைதானத்தை வீட்டு நம்பர் 9 என்று வைத்துக் கொண்டு விசாரணையைத் துவங்குவதில் என்ன ஆட்சேபனை?

நான்காமவன்: ரொம்பவும் சரி ஜனாப்! தங்கள் உத்தரவு. ஆனால் நான் சோதனை போடட்டுமா?

மூன்றாமவன் : இதில் கேட்பதற்கென்ன இருக்கிறது!

முதலாமவன் : ஆனால்...இப்பொழுது கர்வ்யூவும் இல்லை. ஊரில் கலாட்டாவோ, ரகளையோ இல்லை...இத்தனை கெடுபிடி ஏன் சார்!

நான்காமவன் முன்னே வந்து முதலாமவனின் ஜேப்பை சோதனை போடுகிறான்.

இரண்டாமவன் : நாங்களொன்றும் ரவுடிகளோ, போக்கிரிகளோ இல்லை. கண்ணியமானவர்கள்.

நான்காமவன் : (முதலாமவனின் ஜேபிலிருந்து நகைகளை எடுத்தவாறே) சார் தங்க வலையல்கள், தங்கச் சங்கிலி.

மூன்றாமவன் : ஹூம்...கொண்டு வா இங்கே.

முதலாமவன் : [பெண்ணைச் சுட்டிக் காட்டி] இவைகள் இவளுடைய நகைகள். என் மனைவியினுடையவை.

(நான்காமவன் நகைகளை மூன்றாமவனிடம் கொடுத்துவிட்டு இரண்டாமவனை நோக்கிச் செல்லுகிறான்).

மூன்றாமவன் : (இரண்டாமவனை நோக்கி) இவைகளை நீ ஏன் ஜேபியில் போட்டு வைத்துக் கொண்டிருக்கிறாய்?

முதலாமவன் : நாய்களுக்கும், பூனைகளுக்கும் பயந்து.

மூன்றாமவன் : என்ன சொன்னாய்?

முதலாமவன் : ஜீ......சர்கார்......நான் என்ன சொல்ல வந்தேன் என்றால் நாய் பூனைகளின் அச்சுறுத்தும் கூச்சலைக் கேட்டு இவள் ரொம்பவும் பயந்து போய், தன் நகைகளையெல்லாம் கழற்றிவிட்டாள்.

மூன்றாமவன் : எல்லா நகைகளையும்! இங்கே வளையல்களும் சங்கிலி மட்டும் தானிருக்கின்றன. மற்ற நகைகள் எங்கே!

முதலாமவன் : அவ்வளவுதான் சர்கார்.

மூன்றாமவன் : ஹூம் (பெண்ணை உற்றுப் பார்த்தவாறு) மோதிரம் பாக்கி இருக்கிறதே...இது இவளுக்கு நினைவு வந்திராது. அல்லது உன் பார்வை அதில் பட்டிருக்காது. இல்லையா !

நான்காமவன் : சார்......இவனுடைய ஜேபில் ரொம்பவும் கஷ்டப்பட்டு ஓர் பர்ஸையும்-ஒரு (கடிகாரத்தை மூன்றாமவனின் கண்ணில் படாமல் மறைத்துக் கொண்டு) ஒரே ஒரு பர்ஸ்தான் கிடைத்தது சார்.

மூன்றாமவன் : சரி...கிடைத்தது மட்டும் சரி. நம்ப குறி தப்பவில்லை. கொண்டா.......இங்கே.......அவளைக் கொண்டு வா...சொல்லுங்களடா...நீங்கள் யார்! இந்த அம்மாள் யார்!

முதலாமவன் : நான் தான் சொன்னேனே சார்? இவள் என் மனைவி.

மூன்றாமவன் : ஹூம்...பெண்டாட்டி ...(இரண்டாமவனைப் பார்த்து.) அதாவது உனக்கு அண்ணி.

இரண்டாமவன் : ஆமாம் சார்.

மூன்றாமவன் : இந்தப் பர்ஸ் யாருடையது?

இரண்டாமவன் : என்னுடையது சார்.

மூன்றாமவன் : உன் பெயர் என்ன?

இரண்டாமவன் : என் பெயர்......என் பெயர் வந்து...விஷ்வம்பர் நாத்.

மூன்றாமவன் : [பர்ஸை திறந்து பார்த்து] இதில் அமர்நாத் என்றல்லவா எழுதியிருக்கிறது.

இரண்டாமவன் : அமர்நாத்தா! நீங்கள் தவறாகப் படித்திருக்கலாம்.

மூன்றாமவன் : நான் தவறாகப் படித்திருப்பேன் — இல்லையா?

மூன்றாமவன் : உன்னுடைய பெயரே தவறாகிவிட்டது. இல்லையா? உண்மையைச் சொல். இந்தப் பர்ஸ் யாருடையது? இந்த பெண்ணுடன் கூட உனக்கு ஏதோ என்று எனக்குச் சந்தேகம் ஏற்படுகிறது. நீ இவளுடைய நகைகளைக் கொள்ளை அடித்திருக்கிறாய். இவளுடைய கணவனின் பர்ஸைப் பிடுங்கிக் கொண்டு அவனையும் கொன்றிருக்கிறாய். சற்று நேரத்திற்கு முன்னர் யாரோ கூச்சலிடுவது என் காதில் வீழ்ந்தது. அதைக் கேட்டுத்தான் நான் இந்தப் பக்கம் வந்தேன். ஹவல்தார்! கூச்சல் கேட்டதல்லவா?

நான்காமவன் : ஆமாம் சார் - நான் கூட ஏதோ விஷயம் சார் என்று உங்களை எச்சரித்தேன்.

மூன்றாமவன் : விஷயம் இப்பொழுது வெட்ட வெளிச்சமாய் தெரிந்துவிட்டது. இப்பொழுது கண்ணால் பார்த்த ஒரு சாட்சி தேவை. அந்த சாட்சியாக இந்த அம்மாளை எடுத்துக் கொள்ளலாம். இவள் கொலை செய்யப்பட்டவனின் மனைவி. இவளது நகைகளை கொள்ளையடிக்க இவர்கள் முயற்சி செய்துள்ளார்கள். தக்க தருணத்தில் நாம் வந்துவிட்டோம்.

[முதலாமவனும் இரண்டாமவனும் மெல்ல நழுவப் பார்க்கின்றனர். மூன்றாமவன் அவர்களின் மீது ஒரு கண் வைத்தவாறு பெண்ணின் பக்கம் திரும்புகிறான்]

இந்த நகைகள் இந்தப் பெண்ணுடையவை. இந்த பர்ஸில் இறந்து போன இவளது கணவனின் அடையாளம் உள்ளது. நீ ஏனம்மா நிராசையாக இருக்கிறாய்! உனக்கு பெருத்த கொடுமை இழைக்கப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். ஆனால் இனிப் பயப்பட வேண்டிய அவசியமில்லை. நான் வந்துவிடடேன் பாருங்கள். இனி உங்கள் துன்பம், துயரம் எல்லாம் வேரோடு களையப்பட்டுவிடும். ஆனால் ஏன் மௌனமாய் இருக்கிறாய்? ஏதாவது பேசு. நீ பேசாவிட்டால் என் கவலை அதிகரித்துவிடும்.

(முதலாமவனும், இரண்டாமவனும் ஓடிவிடுகின்றனர்)

நான்காமவன் : எஜமான், குற்றவாளி கள் தப்பிவிட்டார்கள்.

மூன்றாமவன் : போனால் போகட்டும் ...என்ன சொன்னாய்? குற்றவாளிகள் தப்பிவிட்டார்களா?

நான்காமவன் : ஆமாம் சார்........ உண்மையில் நம் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு ஓடிவிட்டனர். உத்தரவு கொடுத்தால் நான் அவர்களைத் துரத் திச் செல்லுகிறேன். இனி அவர்கள் நம் கைக்குச் சிக்க மாட்டார்கள் என்ப தென்னவோ......எனக்கு நம்பிக்கை யில்லை.

மூன்றாமவன் : எனக்கு அவர்கள் மீது முதலிலிருந்தே சந்தேகமாகத்தானிருந் தது. அவர்கள் தப்பி ஓடத்தான் வேண்டும். ஓடிவிட்டார்கள். இனி அவர்களுக்கு இங்கென்ன வேலை? என்ன அப்சரசே! நான் சொல்வது உண்மைதானே!

பெண் : உனக்கும் அவர்களுக்கும் எனக்குப் பெரியதாய் வித்தியாசம் ஏதும் தெரியவில்லை. நீங்கள் எல் லோருமே ஒரே குட்டையில் ஊறின மட்டைகள் தான்.

மூன்றாமவன் : நீ சொல்வது முற்றி லும் உண்மைதான். நானும் உன்னு டையவன் போலத்தான். உனக்கு வேண்டியதையெல்லாம் செய்ய, உனக்கு சேவை புரிய எனக்குச் சட்ட ரீதியான உரிமையுள்ளது.

பெண் : நீங்கள் எனக்கு என்ன சேவை ...அதாவது உதவி புரிய முடியும்?

மூன்றாமவன் : நான் உன்னை வசதி யான அறையில் மெத்தென்ற பஞ் சணையில் படுக்க வைப்பேன். உயர் தரமான உணவு வகைகளை அளிப் பேன்.

பெண் : எனக்குத் தங்கள் சேவை எது வும் தேவையில்லை. என் நகைகளைக் கொடுத்து என்னை உயிரோடு விட் டால் போதும் என்று நான் சொன் னால்......

மூன்றாமவன் : அப்பொழுது வசதி யான அறையை கறுப்பு கொட்டடியாக —அதாவது ஜெயிலாக மாற்றி விடு வேன். பஞ்சணை கல் பாவிய தரை யாகிவிடும். உயர்தரமான உணவுக்கு பதிலாக பட்டினி கிடக்க நேரிடும்.

பெண் : நீ சுயநலம் பிடித்தவன்.

மூன்றாமவன் : உன்னை விடவா?

பெண் : நீ மனிதன் அல்ல. மிருகம். எனக்கு உன்னுடைய அனுதாபம் எது வும் தேவையில்லை.

மூன்றாமவன் : ஆனால் எனக்கு நீ தேவை. ஹவல்தார்!

நான்காமவன் : சார்...

மூன்றாமவன்: இவளை ஸ்டேஷனுக்கு அழைத்துப் போய் லாக்கப்பில் போடு.

நான்காமவன் : உத்தரவு சார்......... ஆனால் என்ன குற்றம் என்று?

மூன்றாமவன் : இவள் தன் கணவனைக் கொலை செய்திருக்கிறாள்.

நான்காமவன் : சார்...அந்தப் பிணம்...

பெண் : இல்லை.........நானொன்றும் செய்யவில்லை.

மூன்றாமவன் : எல்லாக் குற்றவாளி களும் இதையேதான் சொல்லுகிறார் கள்.

[நான்காமவனை நோக்கி] நேற்றிரவு ஒரு பிணம் கிடைத்ததல்லவா? இது வரை அது யார் என்று அடையாளம் தெரியவில்லை. அந்தப் பிணம் தான் இவள் கணவன் என்று நிரூபித்துவிட லாம். முதலில் விசாரணை நடத்திவிடு. அதாவது இவள் கணவன் இன்னமும் உயிருடன் இருந்தால் இந்தப் பிணம்

இவளுடைய காதலன் என்று நிருபித்து விடலாம். அல்லது இவளது வாடிக்கைக்காரன், அது, இது என்று ஏதாவது கூறிவிடு. ஆனால் ஒன்று. நீ என்ன செய்தாலும் இவளுக்கு நம்முடைய அதிகாரம் வலிமை பற்றி தெரிந்து விட வேண்டும். புரிந்ததா?

நான்காமவன் : ரொம்ப நன்றாகப் புரிந்தது சார்.

பெண் : இல்லை. நான் எதுவும் செய்ய வில்லை. நான் குற்றவாளி இல்லை.

மூன்றாமவன் : நீ ஒன்றும் செய்ய வில்லை என்பதுதான் உன் குற்றம்.

பெண் : நீங்கள் சொல்லுகிறபடி.........
[கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கிறது]

மூன்றாமவன் : ஹவல்தார்...யார் வந்திருக்கிறது என்று பார்!

நான்காமவன் : (ஸ்டேஜின் ஒரு புறம் சென்று எட்டிப் பார்க்கிறான். பிறகு விரைந்து வருகிறான்.) சார்...கார்... மிஸ்டர் பந்து...ஜீயினுடையது.

மூன்றாமவன் : யாரது பந்தூ.

நான்காமவன் : அதுதான் சார்...லீடர் ...தலைவர் அவர்கள்.

மூன்றாமவன் : [திடுக்கிட்டவனாய்] இவன் எங்கிருந்து வந்தான்? ஹும்... ஏய்...இப்பொழுது என்ன செய்வது?

நான்காமவன் : செய்வதென்ன சார்! நம் துரதிர்ஷ்டம்.

மூன்றாமவன் : [பெண்ணை நோக்கி அதட்டும் குரலில்] இதோ பார்...இவருக்கு முன்னால் நீ ஏதாவது உளறிக் கிளறி வைத்தால்...

[தலைவர் வேடத்தில் பந்தூவின் பிரவேசம்]

பந்தூ: ...ஹி...ஹி...ஹி...என்னப்பா... அரசு ஊழியர்களே ...

(இருவரும் வணக்கம் தெரிவிக்கின்றனர்). என்ன விஷயம்? ஹவல்தார்! யாரப்பா இந்த அழகிய பெண்!

நான்காமவன் : சார்......இந்த இரவில் இந்த மையிருட்டில்......

பந்தூ : காவற்காரரே! நான் உங்களிடம் இல்லை. ஹவல்தாரிடம் கேட்டேன்.

நான்காமவன் : சார்! நான் காவற்காரன் இல்லை. ஹவல்தார். இவர் தான் இன்ஸ்பெக்டர் சாகப்.

பந்தூ : உங்கள் வாய் இப்படியே நீண்டு கொண்டு போனால் சீக்கிரம் காவற்காரனின் பதவியிலிருந்து இறக்கி விடுவேன்.

நான்காமவன் : சார்......

பந்தூ : ஹும்...

நான்காமவன் : சார்! தவறு நேர்ந்து விட்டது. மன்னித்து விடுங்கள் சர்கார்.

பந்தூ : சரி...சரி...நான் என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்...

மூன்றாமவன் : சார்...இந்த அழகியைப் பற்றி...

பந்தூ : நான் என் குடிலை நோக்கி சென்று கொண்டிருந்தேனா......இந்த மையிருளில் எனக்கு நிலவின் மென்மையான ஒளி தென்பட்டது. நான் காரை நிறுத்தச் சொன்னேன். கண் எதிரே நிலாவையே தரிசித்து விட்டேன். நான் கறுப்பு மார்க்கெட்டின் திறப்பு விழாவைத் துவங்கிவிட்டு இந்திர சபையில் அப்சரஸ்கள் தங்கள் மென் கரங்களால் அளித்த மதுவை அருந்தி விட்டு வந்து கொண்டிருக்கிறேன். ஆனால் அங்கே இவள் போன்ற பொற்கொடி எவளும்

தென்படவில்லை. பேரழகியே! நீ யார்! நீ ஏன் வாய் திறந்து பேசமாட்டேன் என்கிறாய்! உனக்கு என்ன ஆபத்து நேரிட்டது? அரசியல் என்னும் இந்த உலகத்தில் பரமபிதாவான பரமேஸ்வரர் மக்களின் துன்பங்களையும் துயரங்களையும் துடைத்தெறிவதற்காகவே என்னை அனுப்பியுள்ளார். அதனால் நீ தயங்காதே! உனக்கு சேவை புரிய அரியதொரு சந்தர்பத்தை அளித்து நான் வாழ்வின் பயனை அடையும்படி செய். இல்லையெனில் நான் பெரும் தண்டனைக்குள்ளானவனாகிவிடுவேன்.

பெண் : என்னுடையவை யாவுமே பறிபோய்விட்டன.

பந்தூ : நீ மகத்தானவள். உனது ஜன்மம் சாபல்யமாகிவிட்டது. தன்னுடைய யாவற்றையும் இழப்பதின் மூலம் தான் வாழ்க்கை வெற்றி பெறுகிறது. என்னைப் பார். ஜன்ம, ஜன்மமாக நான் யாவற்றையுமே இழந்து கொண்டு தானிருக்கிறேன். ஆனால் இன்று வரை என் வாழ்க்கை முழுமை அடையாமலே இருக்கிறது. என் வாழ்க்கை, எனது பிறவி வெற்றி அடையும் நல்ல நாள் இன்றுதான் போலும். அதனால் தான் உனது தரிசனம் எனக்குக் கிட்டியுள்ளது. உனக்குச் சேவை புரிய அரியதொரு வாய்ப்பு எனக்குத் தானே கிடைக்க வேண்டும்!

பெண் : சேவை, சேவை, சேவை...... எனக்கு யாருடைய சேவையும் தேவையில்லை. நீங்கள் யாவருமே பொய்யர்கள். ஏமாற்றுக்காரர்கள். உங்களுக்கெல்லாம், தார்மீக நெறி, மதம், கடவுள் எதுவும் கிடையாது. நான் உங்களை வெறுக்கிறேன்.

மூன்றாமவன் : ஏ, நெறி கெட்டவளே! வாயை அடக்கிப் பேசு. எதிரே வந்திருப்பது யார் தெரியுமா?

நான்காமவன் : நாக்கை இழுத்து அறுத்துவிடுவேன்!

பந்தூ : அமைதி, அமைதி. தேவி! இத்தனை கடுமையான வார்த்தைகளை உதிர்க்கும் முன், நான் உனது எதிரி அல்ல, நண்பன், சேவகன் என்பதை யோசித்துப் பார்த்திருக்க வேண்டும்.

பெண் : எனக்கு யாரும் நண்பனோ - சேவகனோ கிடையாது. நீங்கள் யாவரும் வேஷதாரிகள்.

பந்தூ : இத்தனை விசாலமான இதயம் படைத்த நீ இப்படி சின்னத்தனமான வார்த்தைகளை எப்படிப் பேசுகிறாய் என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. எனக்கு கடவுள், தர்மம், மதம் என்று எதுவும் கிடையாதென்று நீ சொன்னாயே.........அது முற்றிலும் உண்மை. இதெல்லாம் எனக்கு இருக்கவும் கூடாது. இவையெல்லாம் சின்னச் சின்னக் கோடுகள். இவை மனிதனை, மனிதனிடமிருந்து பிரித்துவிடுகின்றன. தேவி! அரசியல்தான் எங்கள் கடவுள். சேவைதான் என் தர்மம். எனது மதம் என்ன தெரியுமா! பிற்பட்ட, பின்தங்கி விட்ட மக்களிடையே சென்று, அவர்கள் மீட்சி பெற அவர்கள் மேன்மையடைய சொற்பொழிவு ஆற்றுவது. இதுதான் எனது மதம்.

பெண் : இதையெல்லாம் பற்றி எனக்கு அக்கறை ஏதுமில்லை.

பந்தூ : தேவி! என் கோபத்தை கிளறிவிட முயற்சிக்காதே. இந்த இதயம் உனது மதுரமான குரலில், இனிமையான வார்த்தைகளைக் கேட்கத் தவித்துக் கொண்டிருக்கிறது. நாடு இன்றுள்ள நிலையில் அதைச் சீர்த்திருத்த வேண்டியது மிகவும் அவசியமானது. நீ எனக்கு உற்சாகம் ஊட்டாத வரையில் இப்பணி நிறைவேறாது. நான் உன்னிடமிருந்து இதற்கான உற்சா

கத்னத, ஊக்கத்னதப் பெற விரும்பு கிறேன். நீ தாய்க்குலம். நீ இந்தியப் பெண். இந்தியப் பெண் தனது கடமை யிலிருந்து பின் வாங்கியதில்லை என் பதற்கு வரலாறே சாட்சியாகும். அவள் என்றும் எளியவர்களை, துன்பப் படுகிறவர்களை உதறித் தள்ளி யதில்லை. என்றும் அடைக்கலம் தந்தே இருக்கிறாள்...அரசாங்க ஊழி யர்களே; தேவியாரை எனது காருக்கு அழைத்துச் செல்லுங்கள்.

[மூன்றாமவனும், நான்காமவனும் அப் பெண்னண இழுத்துக் கொண்டு செல் லுகின்றனர்.]

பெண் : என்னை எங்கே கொண்டு போகிறீர்கள்.

பந்தா : எனது ரங்கமகலுக்கு அழைத் துச் செல்லுகிறேன் உன்னை. அங்கு சென்று நாட்டு மக்களைப் பற்றி சிந் திப்போம்.

பெண் : இம் மாதிரி அர்த்தமற்ற விஷ யங்களைப் பற்றி நான் வீணாக யோசிக்க விரும்பவில்லை.

பந்தா : எதைப் பற்றிய சிந்தனையும் அர்த்தமற்றதல்ல. ஆனால் எப்பொழு தும் சிந்தித்துக் கொண்டிருப்பதுதான் வீணானது. இதனால் இந்த சிக்கலான குழப்பத்தில் மாட்டிக் கொள்ள வேண் டிய அவசியம் ஏதுமில்லை.

பெண் : ஆனால் என்னுடையவைகளை யெல்லாம் இவர்கள்...

பந்தா : இவர்களிடம் என்ன இருக் கிறதோ அது இவர்களிடமே இருக்கட் டும். உன்னிடமிருப்பதை எனக்காக எடுத்துக் கொண்டு வா போதும். நான் உன் ஆசைகளையெல்லாம் தீர்த்து வைக்கிறேன். எனது ஷோ கேஸில் உன்னை அலங்கரித்து நிற்க வைக்கி றேன்...ஊழியர்களே!

(மூன்றாமவனையும், நான்காமவனை யும் அப்பெண்னணை அழைத்துச் செல் லும்படி ஜாடை காட்டுகிறான். அவர் கள் அப்பெண்னணை பிடித்து அழைத்துச் செல்ல பந்தா பின்னால் செல்லு கிறான். விளக்கு அணைகிறது.]

[இடது புறமிருந்து ஆண் வருகிறான். ஒளி அவன் மீது விழுகின்றது.]

ஆண் : உரக்கச் சிரிக்கிறான் — ஹ... ஹ...ஹ...முட்டாள்கள் உலகம் முன் னேற்றப் பாதையில் முன்னேறிக் கொண்டிருக்கிறது என்று சொல்லுகி றார்கள். அதனால் முட்டாள்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டிருக் கிறதாம். நான் சொல்லுகிறேன். இது அப்பட்டமான பொய். முற்றிலும் தவறு. இப்பொழுது சிந்திக்கின்ற முட்டாள்கள்தான் அதிகம். என்னைக் கொல்ல நினைத்தார்கள். கொன்று விட்டார்கள்.

[எதிர்புறமிருந்து பெண் வருகிறாள். அவள் மீதும் ஸ்பாட்லைட்டின் ஒளி விழுகின்றது].

பெண் : என்னைக் கெடுக்க நினைத் தார்கள். கெடுத்துவிட்டார்கள்.

ஆண் : ஆனால் கொல்வதற்கு முன் நான் உயிரோடு இருக்கிறேனா இல் லையா என்பது பற்றி அவர்கள் யோசித்துக்கூடப் பார்க்கவில்லை.

பெண் : என்னைக் கெடுப்பதற்கு முன் நான் தூய்மையானவளா இல்லையா என்பது பற்றி யோசித்துக்கூடப் பார்க்கவில்லை.

ஆண் : செத்தவனைச் சாகடிப்பதில் என்ன புத்திசாலித்தனம் இருக்கிறது.

பெண் : கெட்டுப்போனவளை மீண்டும் கெடுப்பதில் என்ன புத்திசாலித்தனம் உள்ளது.

ஆண் : ஒழுக்கம் இல்லாத மனிதன் இறந்தவனைப் போன்றவன்.

பெண் : மாசுபட்ட மனம் கொண்ட வரும் தூய்மையானவராக முடியவே முடியாது.

ஆண் : மனம் என்பது கண்ணாடி போன்று தெளிவானது.

பெண் : நிர்மலமான நீரைப் போன்றது மனம்.

ஆண் : காற்றைப் போல அது நிறமற் றது, கறை படியாதது.

பெண் : மனம் தான் ஒழுக்கம், ஒழுக் கம் தான் மனம்.

ஆண் : ஒழுக்கமான நடத்தை சூரிய னைப் போன்று பிரகாசமானது. வலு வுடையது

பெண் : ஒழுக்கமும், சீலமும் கொண்ட நடத்தையுள்ளவனாக இருப்பின் அவ னது மறைவுக்குப் பின்னும் அவனது புகழ் கொடி பறந்த வண்ணமிருக்கும்.

ஆண் : அவன் இறந்த பின்னும் மரிப்ப தில்லை. அமரனாகிவிடுகிறான்.

பெண் : மக்கள் அவனை ஒரு உதாரண மாய் ஏற்றுக் கொள்கின்றனர்.

ஆண் : ஆனால் இப்பொழுது......அவ னது புகழெல்லாம் மணல் போல் உதிர்ந்துவிட்டது. அவனை உள்ளுக் குள்ளேயே கரையான் அரித்துவிட்டது போல் தோன்றுகிறது.

பெண் : அவனுடைய பிரகாசமான அம்சத்தின் மீது அரசியல் புழுதி படிந்து விட்டது.

ஆண் : பிறரைக் காப்பி அடிப்பது நமது நியதியாகிவிட்டது. ஏன் என்றால் அது நமது நாட்டின் நியதி. மக்களின் இயற் கையான சுபாவமாகிவிட்டது.

பெண் : அண்டை அயலார்களைப் போன்ற உருவம், தோற்றம் வருவ தில்லை. ஆனால் அவர்களது வாழ்க்கை முறை வந்துவிடுகிறது.

ஆண் : அடுத்தவனின் முகம் சிவப்பாக இருந்தால் நீ உன் முகத்தில் அறைந்து கொண்டு சிவப்பாகி விடு......இதுதான் இப்பொழுது உள்ள நிலைமை.

பெண் : நாம், நாம் யாரென்பதை மறந்துவிட்டு பிறரை காப்பியடிக்கத் துவங்கிவிட்டோம்.

ஆண் : நம்முடைய துப்பட்டி எப்படி யிருக்கிறது என்பதைப் பார்த்துக் கொள்ளாமலேயே கால்களை நீட்டிக் கொள்ளத் துவங்கிவிட்டோம்.

பெண் : துப்பட்டியை இன்னும் நீள மாக்கிக் கொள்ள வேண்டி, கால்களில் மாட்டி இழுக்கத் துவங்கிவிட்டோம்.

ஆண் : துப்பட்டி என்னவோ நீண்டது கொஞ்சம். ஆனால் நடுவிலேயே பட் டென்று கிழிந்துவிட்டது.

பெண் : நம்மால் முழுவதும் போர்த்துக் கொள்ளவும் இயலவில்லை. நிர்வாண மாகவும் இல்லை.

ஆண் : வண்ணான் வீட்டு நாய் போன்ற நிலைதான் நமது.

பெண் : பின்னர் - மெதுவாக, மெல்ல, மெல்ல துப்பட்டி முழுவதுமே கிழிந்து விட்டது.

ஆண் : நாம் போர்வையற்றவர்க ளாக,ஆடையற்றவர்களாகிவிட்டோம். ஆனால் அம்மணமாகிவிட்டோம் என்ற உணர்வு யாருக்குமே ஏற்படவில்லை.

பெண் : பிறர் மீது குற்றம் சாட்டுவது குற்றம் குறை கூறுவது, நம்முடைய வழக்கமான மரபாகிவிட்டது.

ஆண் : மற்றவர்களை தவறு இழைப்பவர்கள் எனக் கூறுவது அவர்களது தவறுகளை விமர்சிப்பது நமக்குத் தொழிலாகிவிட்டது.

பெண் : நம்மை நாமே திருத்திக் கொள்ள வேண்டும் என்பதில் யாருடைய கவனமும் செல்லவில்லை.

ஆண் : இதற்கு எதிர்மறையான பொருள் தான் எப்பொழுதும் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

பெண் : எல்லோரும் நாட்டைப் பற்றிச் சிந்திக்கத் துவங்கிவிட்டார்கள்.

ஆண் : சிந்திக்கத்தான் செய்தார்கள். தன்னளவில் கூட யாரும் எதையும் செயலாற்றவில்லை.

பெண் : சிறியவர், பெரியவர் ஒவ்வொருவரும் தவறான வழிகளில் நடைபோடத் துவங்கிவிட்டனர்.

ஆண் : எல்லோரும் நேர்மையைப் பற்றிய பாடத்தைப் படித்துவிட்டு நேர்மைக்கு புறம்பானவற்றை விநியோகிக்க துவங்கிவிட்டனர்.

பெண் : தந்திரங்கள், மோசடிகள், தில்லுமுல்லுகள், தகடுதத்தங்களுக்கு ஆட்சி என்ற பெயர் கொடுக்கப்பட்டுவிட்டது.

ஆண் : ஆட்சியும் அதிகாரமும் சுயநலமானதாக மலிவானதாகப் போய்விட்டது.

பெண் : ஆட்சி அசிங்கம் பிடித்ததாக, உபயோகமற்றதாகிவிட்டது.

ஆண் : ஒரு கப் தேநீருக்கு சாணக்கியன் விற்பனைப் பொருளாகிவிட்டான்.

பெண் : கார்ல்மார்க்ஸ் சிகரெட்டில் கரைந்துவிட்டான்.

ஆண் : லெனின், ஸ்டாலின், மாவோ, சாருமஜூம்தார் வேடிக்கை பார்ப்பவர்களாகிவிட்டனர்.

ஆண் / பெண் / இருவரும் } சுயநலமிகளாகிவிட்டனர். தன்னலவாதிகளாக, மோசக்காரர்களாகிவிட்டனர்.

(இருவரும் இவ்வாறு கூறிக்கொண்டே சென்றுவிடுகின்றனர்.

ஒளி அணைந்துவிடுகிறது. ஒளி இப்பொழுது வட்டமாக போடப்பட்டிருக்கும் நாற்காலிகளின் மீது விழுகின்றது. அந்நாற்காலிகளில் நால்வரும் அமர்ந்துள்ளனர். தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டிருப்பது போல் அபிநயிக்கின்றனர். இது காம்ரேட் ரவிகாந்தின் வீடு. வீட்டைக் காண்பிக்க பின்புறத் திரையில் கார்ல்மாக்ஸின் போட்டோ மாட்டப்பட்டிருக்கிறது. காம்ரேட்டின் வீட்டைக் காட்டும் போது மட்டும் அது காட்டப்பட வேண்டும். மற்ற சமயங்களில் அதைத் திருப்பிவிடலாம். பின்புறப் பகுதியிலிருந்து காம்ரேட் ரவிகாந்த் வருகிறார். வளர்ந்துள்ள தாடி, கண்களில் கண்ணாடி. வாயில் சிகரெட், கையில் சார்மினார் சிகரெட் டப்பா, தீப்பெட்டி. அவர் வந்ததும் நால்வரும் எழுந்து வணக்கம் தெரிவிக்கின்றனர். காம்ரேட் பேசும் போது உணர்ச்சி வயப்பட்டு நடு நடுவே மேஜையின் மீது முஷ்டியால் குத்துகிறார்).

காம்ரேட் : காம்ரேட்ஸ் நாட்டின் இன்றைய நிலை மிகவும் வேதனை தருவதாக உள்ளது என்பதை நீங்கள் யாவரும் அறிவீர்கள். உழைக்கும் வர்க்கம் நாளுக்கு நாள் நசுக்கப்படுகிறது. ஒடுக்கப் படுகிறது. இந்த முதலாளி வர்க்கம் உழைப்பாளி வர்க்கத்தினரை எக்ஸ்ப்ளாய்ட் செய்து கொண்டே போகிறது. அவர்களது உரிமைகள் பிடுங்கிக் கொள்ளப் படுகின்றன. மில் தொழிலாளி, தனது வியர்வையை சிந்தி பாடுபட்டு, உற்பத்தி செய்வதை மில் முதலாளி, அதாவது இன்டஸ்டிரியஸ்ட் விற்பனை செய்து பன்மடங்கு லாபம் சம்பாதிக்கிறான். இங்கோ தொழிலாளி

யின் குழந்தைகள் பட்டினி கிடந்து சாகின்றனர். இரண்டு வேளை வயிற்றை நிரப்ப சாப்பாடு அவர்களுக்குக் கிடைப்பதில்லை. முதலாளி வர்க்கமோ, அவனது உழைப்பின் பலனை விஸ்கியாக ஓடவிடுகிறது.

முதலாமவன் : செங்கொடி

இரண்டாமவன் : வாழ்க, வாழ்க.

முதலாமவன் : நாங்கள் கோருவது

எல்லோரும் : கம்யூனிசம்.........பொது உடமை.

காம்ரேட் : கம்யூனிஸ்ட் தி வோன்லி மிலிடென்ட் க்ளாஸ். காமரேட் லெனின் இது பற்றி சரியாகவே சொல்லியிருக்கிறார்.

பவர் ஷுட் பீ இன் தி ஹான்ட்ஸ் ஆஃப் வொர்கர்ஸ் அண்ட் பெசென்ட்ஸ். தோழர்களே! கம்யூனிசத்தை அமுலுக்குக் கொண்டு வருவது மிகவும் அவசியமானது. அது இன்றி நாட்டிற்கும் நன்மை ஏதும் விளையாது. அதற்காக நாம் பிற்போக்கு சக்திகளை ஒடுக்கியாக வேண்டும். காம்ரேட் மாவோ என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா—பொலிடிகல் பவர் க்ரோஸ் அவுட் ஆஃப் தி பேரல் ஆஃப் தி கன். இந்த வார்த்தைகள் நூற்றுக்கு நூறு உண்மையானவை.

மூன்றாமவன் : காம்ரேட் மாஸேதுங்

எல்லோரும் : ஜிந்தாபாத்.

நான்காமவன் : காம்ரேட் லெனின்

எல்லோரும் : ஜிந்தாபாத்.

காம்ரேட் : இந்த முதலாளித்துவ, பண ஆதிக்கமுள்ள அமைப்பை அகற்ற நமக்கு டிவோஷன் மிகவும் தேவை. இதற்கு ஆக்ஷன் தேவை. 'யுனைட் அண்ட் அட்டாக்' காம்ரேட் மாவோவின் இந்த தியரிக்கு பிராக்டில் ஷேப் கொடுத்தால்தான் நாம் வெற்றி அடைய முடியும். நமக்கு சமத்துவம் வேண்டும். யாவரும் சமம். இந்த சமத்துவம் நாம் போராடாமல் நமக்கு கிடைக்காது. இதைப் பொய் சொல்லி ஏமாற்ற முடியாது. காம்ரேட் கார்ல் மார்க்ஸ் தொழிலாளித்துவமும், முதலாளித்துவமும்... இரண்டும் பரஸ்பர விரோதிகள் என்று கூறியுள்ளார். ஆம்! தோழர்களே...இது உண்மை. உங்களுக்கெல்லாம் தெரியும். நம்முடைய போராட்டம் முதலாளித்வத்திற்கு எதிரானது. ஆனால் காம்ரேட்ஸ் ! முதலாளிகளைவிட ஆபத்தானவர்கள் யார் தெரியுமா! ப்யூரோக்ரட்ஸ், அதாவது அதிகார வர்க்கமும், பத்தாம் பசலிகளான பூர்ஷுவாக்களும்தான். இவர்கள் மீண்டும் தலை எடுக்க மாட்டோம் எனக் கதறும்படி இவர்களை அடித்து நொறுக்க வேண்டும்.

முதலாமவன் : இன்குலாப்... இன்குலாப்.

எல்லோரும் : ஜிந்தாபாத்—ஜிந்தாபாத்

காம்ரேட் : இதற்காக — தொழிலாளிகளும், விவசாயிகளும் ஒன்றாக இணைய வேண்டும். தங்களுடைய உரிமைகளைப் பறித்துக் கொண்டு நிலை நாட்ட வேண்டும். சுரண்டுகிறவனை அடியோடு அழிக்காத வரையில் அவன் சுரண்டுவதை விடமாட்டான். அதனால் அவனைப் பூண்டோடு ஏன் அழிக்கக் கூடாது? அந்த அசிங்கம் பிடித்த அமைப்பை வேருடன் பிடுங்கி ஏன் எறிந்துவிடக் கூடாது? இது பற்றி எனக்கு காம்ரேட் அல்லாமா இக்பாலின் ஷேர் ஒன்று நினைவு வருகிறது. ''எந்த வயலிலிருந்து அதை உழுபவனுக்கு உணவு கிடைப்பதில்லையோ அந்த வயலில் விளையும் தானியம் ஒவ்வொன்றையும் எரித்துவிடு.''

இரண்டாமவன் : உலகமெங்குமுள்ள தொழிலாளர்களே !

யாவரும் : ஒன்று திரளுங்கள்.

காம்ரேட் : தோழர்களே! எதிரி என்ன பிரமாதம். ஒன்றுமேயில்லை. அவனைப் பிடிப்பதற்கு டாக்ட் அதாவது தந்திரமான சாமர்த்தியம்தான் தேவை. இதற்கு காம்ரேட் மாவோவின் ஃபார்மூலாவை அமுல் படுத்துங்கள். எதிரியை வெற்றி கொள்வது மிகச் சாதாரணமான விஷயமாகிவிடும். காம்ரேட் மாவோவின் கூற்றுப்படி எதிரி வெறும் காகிதப் புலி. நீ அவனை நிஜமான புலியாக நினைத்து பயந்துவிட்டால் அவ்வளவுதான். அவன் நிஜமாகவே புலியாகிவிடுவான். அவன் காகிதப் புலி — வெற்று வேட்டு என நினைத்து நீ அவனைத் தாக்கினால் அவன் அப்படியே மண்ணோடு மண்ணாகி விடுவான்.

(வேறொரு விஷயத்தைத் துவங்கும் முனைப்புடன்)

ஆமாம், தோழர்களே! இந்த டிரேட் யூனியன் ஸ்டைரக் என்னவாயிற்று? தொழிலாளிகளுக்குப் போனஸ் கிடைக்கிற சான்ஸ் ஏதும் தெரிகிறதா—இல்லையா?

மூன்றாமவன் : இல்லை...அது மிகவும் கடினமாகத் தோன்றுகிறது.

காம்ரேட் : ஏன்?

நான்காமவன் : விஷயம் ரியலி இதுதான். அது உங்களுக்கே தெரியும். யூனியன் லீடர் நத்துராமை இவர்கள் மிரட்டி கைது செய்ததும், ஸ்டைரக் வலுத்தது. அவனை ரிலீஸ் செய்துவிட்டதும்...எல்லாம் அப்படியே மந்தமாகிவிட்டது.

காம்ரேட் : இதன் காரணம் !

மூன்றாமவன் : அவர்கள் சில தொழிலாளிகளை விலைக்கு வாங்கிவிட்டனர். அவர்கள் தொழிலாளிகளுக்குள் பிணக்கை ஏற்படுத்தி ஒரு சிலரை நத்துராமிற்கு எதிராக தூண்டிவிட்டு விட்டனர். நத்துராம் முதலாளிகளிடம் பணம் வாங்கிக் கொண்டு அவர்கள் பக்கம் சாய்ந்துவிட்டான். பணத்தைச் சாப்பிட்டுவிட்டான் என்று செய்தியைப் பரப்பினார்கள். இன்னும் சிலர் நத்தூ மன்னிப்புக் கேட்டுக் கொண்டதால் தான் விடுதலையாகிவிட்டான், இல்லாவிடில் வெளியே விடுவார்களா என்றனர்.

காம்ரேட் : நீங்களெல்லாம் என்ன முடிவுக்கு வந்துள்ளீர்கள்? நாம் என்ன செய்ய வேண்டும், என்ன செய்யலாம் என்று யோசித்தீர்களா?

நான்காமவன் : எங்களுக்கு ஒரு சின்ன டிரையல் காட்டுங்கள்.

முதலாமவன் : இச்சமயம் தொழிலாளிகளுக்குள் கருத்து வேற்றுமையும், சச்சரவும் உள்ளது. டிரையல் காட்டுவது முட்டாள் தனம்.

காம்ரேட் : யூ ஆர் ரைட்! இதற்கு முன் தொழிலாளர்களை ஒன்று திரட்ட வேண்டும். அதைவிட முக்கியமானது கேடர். நம்மிடம் எத்தனை கேடர் இருக்கின்றன? அவர்களின் பலத்தினால் தான் டிரயல் காண்பிக்க முடியும்.

இரண்டாமவன் : காம்ரேட் நீங்கள் கவலைப்படாதீர்கள். இந்தத் தடவை யூனிவர்சிடி முழுவதும் நம்முடையது தான். இம்முறை பேட்ச் கூட பர்ஸ்ட் கிளாஸாய் வந்திருக்கிறது.

காம்ரேட் : அந்தக் கேடர் முழுவதுமே நம்முடையது என்பதற்கு என்ன அத்தாட்சி? உன்னோடு கை குலுக்குபவன் உன்னுடைய கேடராக இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. நீங்கள்

நினைப்பது போல் ஒருவனை நம் நம்பிக்கைக்கு பாத்திரமானவனாகும் படி செய்வது அத்தனை சுலபமல்ல.

இரண்டாமவன் : எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது. ஐ ஹாவ் கான்பிடன்ஸ். அதனால்தான் இதைச் சொன்னேன். நீங்கள் என்ன அத்தாட்சி விரும்பினாலும் என்னால் தர முடியும்.

காம்ரேட் : குட்! உனக்கு உன் மீது இத்தனை நம்பிக்கை இருப்பது பற்றி எனக்குச் சந்தோஷம். ஒரு மாதிரிக்காக ஒரு சின்ன ஸ்ட்ரைக் நடத்து. நாம் அடுத்த ஸ்ட்ரைக் நடத்துவது பற்றி யோசிக்க, நம்பிக்கை ஏற்படட்டும்.

இரண்டாமவன் : இதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் ஒன்று. ஏதாவதொரு காரணமின்றி அப்படிச் செய்தால் நாம் ஏற்படுத்திய கான்பிடன்ஸை எல்லாம் இழந்துவிட நேரிடும். இதனால் ஏதாவது சாலிட் பாயின்ட் தேடியாக வேண்டும்.

முதலாமவன் : காரணம் நான் சொல்லுகிறேன். முற்றிலும் புதிதானது. சாலிட் பாயின்ட். இரண்டொரு நாட்களுக்கு முன் நடந்த விஷயம். வி. சி. ஒரு பையனைத் திட்டியிருக்கிறார். ஆபீஸிலிருந்து கழுத்தைப் பிடித்து தள்ளியிருக்கிறார். அவனை கல்லூரியிலிருந்தும் வெளியேற்றிவிடுவேன் என்று மிரட்டி இருக்கிறார்.

காம்ரேட் : அவருக்கு இத்தனை துணிச்சலா? என்ன விஷயம் அது?

முதலாமவன் : ஒரு பணக்கார லாலாவின் பிள்ளை சொல்லியதின் பேரில் ஒரு கையாலாகாத புரொபசர் அந்தப் பையனை அவமானப் படுத்தி இருக்கிறார். அதை அந்தப் பையனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவன் வி.சி.யிடம் சென்று முறையிட்டிருக்கிறான். வி.சியோ அவனையே குற்றவாளியாக்கியிருக்கிறார். பையலுக்கு கோபம் வந்துவிட்டது. அந்தப் பையன் ஒரு கிராமத்து விவசாயியின் மகன்.

காம்ரேட் : ப்யூரகெட், தோழர்களே இத்தனை பெரிய விஷயம் நடந்திருக்கிறது. நீங்கள் எனக்குச் சொல்லவேயில்லையே! அவன் ஒரு கிராமத்துக் குடியானவன் மகன் என்பதால்தான் அவன் கூறியது அம்பலம் ஏறவில்லை. இது நமக்கெல்லாம் மிகவும் வெட்கக்கேடான விஷயம். காம்ரேட்ஸ் டோன்ட் வி சி வி ஆர் ப்ரோக்ரஸிவ். டூ சம் ப்ராக்டிகல். நாளைக்கு யூனிவர்சிடியில் என்ன ஆனாலும் சரி ''பந்த்'' நடக்க வேண்டும்.

இரண்டாமவன் : நல்லது. நாங்கள் ப்ரொடொஸ்ட் செய்கிறோம். நீங்கள் சொன்னால் வி.சி.யை ஆபீஸிலிருந்து வெளியே இழுத்துக் கொண்டு வந்து விடலாம்.

காம்ரேட் : அதுதான் நடக்க வேண்டும் முதலில் இதைவிட அதிகமாய்க் கூடச் செய்யலாம். ஆனால் அதற்குரிய தருணம் இன்னும் வரவில்லை. நீ இந்தப் பிக்சர்க்குள் வந்துவிடாதே. எங்கேயாவது நமது பிளான் எல்லாம் தவறாகிவிடப் போகிறது.

இரண்டாமவன் : நல்லது.

காம்ரேட் : சரி... நீ போய் நாளைய ஏற்பாடுகளைக் கவனி.

(இரண்டாமவன் எழுந்து சல்யூட் செய்து விட்டுப் போய் விடுகிறான்.) அவன் சென்றபின் காம்ரேட் முதலாமவனை நோக்கி — இந்தப் பையன் இன்னும் அறிவு பூர்வமாக மெச்சூர் ஆகவில்லை. கொஞ்சம் டப்பா. ஆனால் காரியம் செய்வதில் நல்ல ஆர்வம் இருக்கிறது.

முதலாமவன் : மெல்ல மெல்லச் சரியாகிவிடும்.

மூன்றாமவன் : அவன் சரியாகி விடுவான். ஆனால் ஸ்ட்ரைக் பெயில் ஆனதால் நம்முடைய பொசிஷன் மோசமாகியுள்ளதே...அது எப்படி சரியாகும் பழயபடி!

நான்காமவன் : நமது எக்ஸிஸ்டென்ஸே இனி எங்கும் இராது. இனி யாரும் நாம் சொல்வதைக் காதில் போட்டுக் கொள்ள மாட்டார்கள்.

காம்ரேட் : இப்படிச் செய்யுங்களேன்—முதலில் தொழிலாளிகளின் ஒரு கூட்டத்தைக் கூட்டுங்கள். முதலில் நத்துராமின் பொஸிஷனை கிளியர் செய்யுங்கள். அத்துடன் நமது பொஸிஷனும் கிளியராகிவிடும். இரண்டாவது, தொழிலாளிகளை, அதாவது பைசா வாங்கிக் கொண்டார்களே, அவர்களை நம்மீது நம்பிக்கை கொள்ளும்படி செய்யுங்கள். அதாவது நம் பக்கம் இழுத்துக் கொள்ளுங்கள். அடுத்த ஸ்டப் அவர்கள் மூலமாக எடுக்கும்படியாக...என்ன?

மூன்றாமவன் : இது மோசமான எலிமெண்ட்

நான்காமவன் : அவர்கள் நமது எதிரிகள்.

காம்ரேட் : எதிரியை நம் பக்கம் கொணர்ந்து அடிப்பதில் உள்ள மஜா, அவனை அன்னியப் படுத்தித் தாக்குவதில் இல்லை.

மூன்றாமவன் : அது சரி. ஆனால் நம்முடைய லைன் டிப்ஃபர் ஆகிவிடும்.

நான்காமவன் : நம்முடையதென்ன சாணக்கிய தந்திரமா என்ன?

காம்ரேட் : இதைப் பற்றி உங்களை விட எனக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொன்றும் சந்தர்பத்திற்குத் தகுந்தவாறு செய்தால் சரியாக இருக்கும்.

முதலாமவன் : இதற்கென்ன தடை? அவர்கள் துரோகிகள் தான். இருந்தாலும் நம்முடைய கேடர் தானே. அவர்களை மீண்டும் லைனுக்குக் கொண்டு வர வேண்டும். நாம் இப்படி ஆத்திரப்பட்டுக் கொண்டே போனால் யாரும் நம்முடன் இருக்க மாட்டார்கள். கொஞ்சம் அப்படி இப்படி என்று ஒவ்வொருவரும் புரண்டு தான் கொடுப்பார்கள். அவர்களின் இந்தப் பழக்கத்தை நாம் தான் அகற்ற வேண்டும்.

மூன்றாமவன் : அது சரி. எனக்கொன்றும் ஆட்சேபணை இல்லை. ஆனால் ஒன்று. நாமொன்றும் சமூக சீர்திருத்தவாதிகள் இல்லை.

முதலாமவன் : வேறென்ன நாம்! மைடியர் காம்ரேட்—நாம் சமூக சீர்திருத்தவாதிகள் தான்.

மூன்றாமவன் : எப்படி?

நான்காமவன் : அப்படித்தான். அவன் சொல்வது சரி. நீ வீணாகப் பேச்சை வளர்த்திக் கொண்டு போகிறாய்.

காம்ரேட் : அப்படியில்லை. கன்வ்யூஷன் இருந்தால் அதை நீக்கிக் கொள்ளத் தானே வேண்டும்.

நான்காமவன் : நல்லது சார்—நாங்கள் கூட்டம் போட்டு அவர்களை கன்வின்ஸ் செய்ய முயற்சிக்கிறோம். (மூன்றாமவனை நோக்கி) வா! போகலாம்.

(இருவரும் எழுந்து சல்யூட் செய்துவிட்டு வெளியே செல்லுகின்றனர்.)

காம்ரேட் : இவர்களிடம் எனக்கு அத்தனை நம்பிக்கை ஏற்படவில்லை.

முதலாமவன் : நீங்கள் சொல்வது சரிதான். மூன்றாமவன் அப்பாவி. ஆனால் நான்காமவன் கொஞ்சம் கன்னிங்.

காம்ரேட் : நானும் அவன் போக்கைப் பார்த்துத்தான் பேசினேன். ஹூம் இவர்கள் எங்கே போய்விடப் போகிறார்கள்? நீ ஒன்று செய் இவர்களுக்குத் தெரியாத உன்னுடைய ஆட்கள் இரண்டு பேரை அழைத்து வா. எனக்கு ஒவ்வொரு நிமிடத்தைப் பற்றிய ரிப்போர்ட் கிடைக்க வேண்டும்.

முதலாமவன் : அப்படி முக்கியமான விஷயமொன்றுமில்லையே!

காம்ரேட் : இச்சமயம் அப்படியொன்றுமில்லை. இருந்தால் உன்னைக் கூப்பிட்டு அனுப்புகிறேன்.

முதலாமவன் : நான் வந்து...

காம்ரேட் : சரி. நீ போகலாம்.

[முதலாமவன் கை குலுக்கிவிட்டுச் செல்கிறான். காம்ரேட் நாற்காலியை விட்டெழுந்து] ''இந்தப் பயல்கள் இப்பொழுது காம்ரேட் ரவிகாந்திற்குக்கூட வழி காட்டத் துவங்கிவிட்டார்கள். இவர்களுக்கு வைத்தியம் செய்துதானாக வேண்டும்.''

[இவர்கள் வெளியேறிய பின், இன்னொரு புறமாக பந்தூ வருகிறான்.]

பந்தூ : ஹி...ஹி...ஹி.... இவர்களுக்கு வைத்தியம் செய்ய, தங்களது அடியேன் ஆஜராக இருக்கிறேன்....சொன்னால் கொஞ்ச நேரத்திற்கு அனுப்பட்டுமா?

காம்ரேட் : (திகிலடைந்தவனாய்) நீங்கள்...உங்களுக்கு...

பந்தூ : நான் வெகு நேரமாக உங்கள் பக்கத்து வீட்டுக்காரர்களுடன் உட்கார்ந்திருந்தேன். சமயம் கிடைத்ததும் பின் வாசல் வழியாக வந்துவிட்டேன். கவலைப்படாதீர்கள். நான் இங்கே வருவதை யாரும் பார்க்கவில்லை.

காம்ரேட் : பார்க்காவிட்டாலும் கூடப் பார்த்துவிடுவார்களே ! வருவதற்கு முன் இன்ஃபார்ம் செய்யுங்கள் என்று எத்தனை முறை சொல்லி இருக்கிறேன்.

பந்தூ : ஹூம்...வந்து...

காம்ரேட் : இன்ஃபார்ம்...என்றால் எனக்கு முன் கூட்டியே தெரிவித்துவிடுங்கள் என்பதுதான்.

பந்தூ : முதலில் சொல்லி அனுப்பலாம் என்றுதான் நினைத்தேன். பிறகு சொல்லி அனுப்புவதைவிட நானே நேரில் வருவது உசிதம் என்றுதான் நினைத்தேன். எனக்கு அவகாசம் ரொம்பக் குறைவு என்று உங்களுக்குத் தெரிந்ததுதான். வேலையோ நிறைய இருக்கிறது...ஹி...ஹி...ஹி... (சிரிப்பு)

காம்ரேட் : அது சரி வந்துவிட்டீர்கள். இனி என்ன காரியம் என்று சொல்லுங்கள்.

பந்தூ : ஹி...ஹி...ஹி...காம்ரேட்... காரியம் அப்படியென்ன இருக்கப் போகிறது. பார்க்க வேண்டுமென மனம் தவித்தது. வந்து விட்டேன். உங்களைப் பார்த்து ரொம்ப நாட்களாகிவிட்டால் நான் நோயாளியாகிவிட்டது போல் தோன்றுகிறது. உடம்பு கொஞ்சம் தளர்ந்தாற் போல் தோன்றவாரம்பிக்கிறது.

காம்ரேட் : மிஸ்டர் பந்தூ. உங்கள் உடம்பைப் பற்றி எனக்கு நன்றாகவே தெரியும். அதற்கு என்னிடம் மருந்தும் இருக்கிறது.

பந்தூ : அதனால்தானே உம்மிடம் வந்திருக்கிறேன். இந்த சுயநலம் பிடித்த உலகத்தில் உங்களைப் போல் கஷ்டங்களையும், வேதனைகளையும் பங்கிட்டுக் கொள்பவர்கள் யார் இருக்கிறார்கள்? எங்கே கிடைக்கிறார்கள்?

காம்ரேட் : மிஸ்டர் பந்தூ, வீணான பேச்சு வேண்டாம். வந்த காரியத்தைப் பற்றி பேசுங்கள். இதுதான் உங்களிடம் எனக்கு பிடிப்பதில்லை. இந்த வெண்ணை தடவும் வழக்கம் உங்களையெல்லாம் விட்டுப் போகாது. எனக்கும் உங்களுக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். கம்யூனிசம் வந்தால் தான் உங்கள் கண் திறக்கும். அப்பொழுது உழைப்பவர்களுக்கு தான் உணவு. அயோக்கியர்களுக்கு பட்டினி தான். உங்களுடைய கார்களும், பங்களாக்களும் பறிமுதல் செய்யப்படும் போது, நீங்களும் ஒரு சாதாரணமான மனிதனைப் போல் வாழ வேண்டியிருக்கும். அப்பொழுது யாரும் யார் மீதும் ஆட்சி செலுத்த முடியாது. ஏன் எனில் யாவரும் சமமானவர்கள்.

பந்தூ : ஹி...ஹி...ஹி...காம்ரேட் கோபித்துக் கொள்ளாமலிருந்தால் ஒன்று சொல்லுகிறேன்.

காம்ரேட் : உங்களைப் போன்ற முதலாளித்துவ, பூர்ஷுவாக்களால் பேசுவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? சரி, சொல்லுங்கள்.

பந்தூ : நீங்கள் அப்படியே உள்ளத்தைத் தொடும்படியாக சொற்பொழிவு செய்துவிடுகிறீர்கள். ஆனால் நான் சொல்வதை கேட்பீர்களானால் அடுத்த தேர்தலில் எங்கள் கட்சி சார்பாக வேட்பாளராக நில்லுங்கள். உங்களை வெற்றி காண வைப்பது என் வேலை.

காம்ரேட் : பந்தூஜி...நம்மிருவருடைய ஐடியாலிஜி பெரிதும் வேறுபட்டது. டிஃபர்...

பந்தூ : ஜி...ஜி...என்னது?

காம்ரேட் : ஐடியாலிஜி டிஃபர்ராகுது. அதாவது நமது கருத்துக்கள் சிந்தனைகள் இசைந்து வரவில்லை. நான் எலெக்ஷனை பாய்காட் செய்கிறேன்.

பந்தூ : கருத்துக்கள் ஒன்றுபடக்கூடும். சரி, போகட்டும். உங்களுக்கு விருப்பமில்லாவிடில் தேர்தலில் போட்டியிட வேண்டாம். இது அப்படியொன்றும் அவசியமானதும் இல்லை. ஆனால் நீங்கள் எனக்காக, என் சார்பில் மேடையில் பேச சொற்பொழிவை எழுதிக் கொடுங்களேன்—ஹி...ஹி...ஹி.

காம்ரேட் : எதற்காக?

பந்தூ : ஒருவருக்கொருவர் உதவுவது மனித தர்மம். நான் நீங்கள் கேட்கிற பணத்தைத் தருகிறேன். நீங்கள் நான் கேட்கிற பிரசங்கத்தை எழுதிக் கொடுங்கள்.

காம்ரேட் : ஹூம்...

பந்தூ : அப்படியென்றால் விஷயம் முடிந்த மாதிரிதானே!

காம்ரேட் : அந்த நேரம் வரும்போது பார்த்துக் கொள்ளலாம். முதலில் நீங்கள் எனது பழய பாக்கியை கொடுங்கள்.

பந்தூ : ஓ...ஓ...புரிந்தது...ஹி.. ஹி... ஹி. நான் இதற்காகத் தானே வந்தேன். உங்களுக்கு நன்றி தெரிவித்துவிட்டு பணத்தையும் கொடுத்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்.

(ஜேபிலிருந்து ஒரு கவரை எடுத்து கையில் கொடுத்தவாறே) ''இந்தாருங்கள். தொழிலாளிகளின் ஹர்தாலை தகர்த்ததற்காக இது."

[காம்ரேட் பெற்றுக் கொள்கிறான். பந்தூ இன்னொரு ஜேபிலிருந்து இன்னொரு கவரை எடுத்துக் கொடுக்கிறான்] இந்தாருங்கள் அட்வான்ஸ்.

காம்ரேட் : எதற்காக அட்வான்ஸ்?

பந்தூ : மாணவர்களிடையே குழப்பத்தை உண்டாக்குவதற்காக. இதன் பின் நான் துண்டுப் பிரசுரங்கள் அச்

சிட்டு மாணவர்களிடையே அமைதி காக்கும்படியாக வேண்டிக் கொள் வேன். அமைதியை ஏற்படுத்தினால் காம்ரேட்ஜீ, இன்னும் கொஞ்சம் பணம் கிடைக்கும் உங்களுக்கு ஹி...ஹி...ஹி. அடுத்த எலெக்ஷனுக்கான ஏற்பாடு களை நான் இப்பொழுதே துவங்கி விட்டேன். மக்களின் மனத்தில் எனக் காக ஒரு இடம் என்றும் இருக்க வேண்டுமல்லவா?

காம்ரேட் : நல்லது...லாலாஜீ! ஆனால் இந்த தொழிலாளிகளுக்கு ஆவேசம் வந்துவிட்டால் யார் சொன்னாலும் கேட்கமாட்டார்கள்.

பந்தூ : காம்ரேட்ஜீ...இந்த தொழி லாளிகளை விரட்டிச் செல்லவும் ஒருவர் வேண்டுமில்லையா!

காம்ரேட் : இவர்களைக் காம்ரேட் பார்த்துக் கொள்வார்.

பந்தூ : ஹி...ஹி...ஹி...அந்தக் காம் ரேட்டும் தங்களைப் போன்றே பரிச்சிய மான கனவானாக இருப்பார். நாம் யாவருமே கனவான்கள்தான். எல்லோ ருக்கும் நாம் நண்பர்கள். வேண்டியவர் கள். நல்லது ! நான் வரட்டுமா?

காம்ரேட் : தங்களிடம் எனக்கொரு காரியம் ஆக வேண்டியிருக்கும் என நினைக்கிறேன். நான் போன் செய் கிறேன்...நடுவில் ஏதாவது இடைஞ்சல் ஏற்பட்டால்...

பந்தூ : நீங்கள் கொஞ்சம் கூட கவ லைப் படாதீர்கள். எனக்கு செய்தி கிடைத்ததுமே காரியம் ஆகிவிடும். நல்லது நான் வரட்டுமா? ஹி...ஹி...

காம்ரேட் : அச்சா...

[மற்றவர்கள் போன வழியிலேயே பந்தூவும் செல்ல வாரம்பிக்கிறார். காம்ரேட் அவரைத் தடுக்கிறார்]

காம்ரேட் : பந்தூஜி...இந்த வழியாக அல்ல, வந்த வழியாகவே செல்லுங் கள்.

பந்தூ : ஓகோ...சரி...சரி...ஹி...ஹி... ஹி.

[பந்தூ செல்லுகிறார்]

காம்ரேட் : இந்த பிஸினெஸ்மைன்ட் பீபிளை ஒரு கட்டுக்குள் கொண்டு வரு வது ரொம்பவும் சிரமம்.

[உட்புறம் திரும்பி குரல் கொடுக் கிறான்.]

லக்ஷிமி! ஓ! லக்ஷிமி!

உள்ளேயிருந்து ஒரு பெண்மணி அரங் கத்திற்கு வருகிறாள். நடுத்தர வயது. சாதாரண உடை. முகத்தில் சுருக்கங் கள். கண்ணில் கண்ணாடி. இவள் தான் காம்ரேட்டின் இல்லத்தரசி. பெயர் லக்ஷிமி.

லட்சுமி : என்ன சொன்னீங்க!

காம்ரேட் : லட்சுமி........நீ உண்மையி லேயே லட்சுமிதான். காலையிலே உன் கிட்ட பணம் கேட்டப்போ...கையிலே காசு இல்லேன்னு சொன்னயே, நினை விருக்கா!

லட்சுமி : பொய்யா சொன்னேன்? இருந்ததையெல்லாம், ஐந்து, பத்து என்று நீங்கள் வாங்கி வாங்கி தீர்த்து விட்டீர்கள். உங்களிடமிருந்து மறைத்து ஏதாவது நான் வைத்திருக் கிறேனா என்ன? கொடுக்க.

காம்ரேட் : (சீண்டுகிறார்) ஆமாம் வைத்திருந்தாய். இதோ பார்! எனக்கு அது கிடைத்துவிட்டது.

லட்சுமி : என்னைச் சீண்டிப் பார்க் கிறீரா! அல்லது சண்டை போட சாக் குத் தேடுகிறீர்களா?

காம்ரேட் : நான் உன்னைச் சீண்டவும் இல்லை. சண்டை போட சாக்குத் தேடவும் இல்லை. உண்மையைத் தான் சொல்லுகிறேன்.

லட்சுமி : உண்மையைச் சொல்லுகிறீர்களா! அப்படியென்றால் நான் பொய் பேசுபவள். உங்களிடம் பொய் சொன்னேன் என்பதுதானே இதன் அர்த்தம்? இந்தப் பட்டம் ஒன்றுதான் பாக்கி இருந்தது. இந்த வீட்டில் காலடி வைத்ததிலிருந்து ஒரு நல்ல துணிகூட நான் உடுத்தியதில்லை. ஒட்டுப் போட்டு, கிழிசல் தைத்து எப்படியோ காலத்தைக் கழித்து வருகிறேன். உங்களுக்குத் தெரியாமல் காசு சேர்த்து வைக்கும் பழக்கம் இருந்தால் ஏதாவது வாங்கிக் கொண்டு இருப்பேனே ! ஆனால் உங்கள் லட்சியமல்லவா குறுக்கே வருது!

காம்ரேட் : ஓ — ஹோ......இத்தனை கோபப்படும்படியாக என்ன நடந்து விட்டது?

லட்சுமி : எனக்கு உங்கமேலே கோபம் இல்லை...என் மீதுதான்.

காம்ரேட் : நான்...நான் வந்து இந்தப் பணத்தைப் பற்றியல்லவா சொல்ல வந்தேன். (கவரைக் காட்டி) பந்தூஜி கொடுத்துவிட்டு போனார்.

லட்சுமி : பந்தூஜீ வந்திருந்தாரா என்ன?

காம்ரேட் : ஆமாம் — இப்பத்தான் போனார்.

லட்சுமி : நம்மைப் பொறுத்த வரையில் பந்தூஜி ஒரு அவதார புருஷர். அவரில்லாவிட்டால் என்ன ஆகியிருக்குமோ தெரியாது. உங்க மீட்டிங்குகள் உங்களை விடுவதேயில்லையே. வேறெதற்கு உங்களுக்கு நேரமிருக்கு !

காம்ரேட் : அந்த மீட்டிங்குகள் அளித்த வரப் பிரசாதம்தான் இது. பந்தூ... நம் மீது ஏதோ கருணை காட்டவில்லை. அவர் பணம் கொடுத்தால் நான் வேலை செய்கிறேன். அவ்வளவு தான். நான் அவரிடம் தானம் ஒன்றும் வாங்கவில்லை. என் மூளையை உபயோகித்து சம்பாதிக்கிறேன். சாப்பிடுகிறேன். புரிந்ததா? இந்தா...இதை வாங்கிக் கொள். (கவரைக் கொடுத்தவாறே) சில சமயம் அன்பாக நாலு வார்த்தை பேச மனது ஆசைப்படுகிறது. ஆனால் நீ எப்பொழுதும் மூடைக் கெடுத்துவிடுகிறாய்.

லட்சுமி : உண்மையைச் சொன்னால் மூடு கெட்டுவிடுகிறது.

காம்ரேட் : சரி, விடு. சண்டை வேண்டாம். இதோ பார்! இதிலிருந்து இருநூறு ரூபாயை எனக்காகத் தனியாக எடுத்து வைத்துவிடு.

லட்சுமி : இருநூறென்ன? எல்லாவற்றையும் நீங்களே வைத்துக் கொள்ளுங்களேன். என்னிடம் எதற்காகக் கொடுக்க வேண்டும். நான் பெயருக்குத்தானே லட்சுமி.

காம்ரேட் : இல்லை லட்சுமி! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நீ வீணாகக் கோபித்துக் கொள்கிறாய். லட்சுமி, வீட்டு லட்சுமி கிருக லட்சுமியிடம் இருந்தால்தான் அழகு. எனக்கு இருநூறு ரூபாய் தான் தேவை. அதுவும் மிக அவசியமான தேவை.

லட்சுமி : உங்களுடைய அவசியமான தேவை என்னவென்பது எனக்குத் தெரியும். மது புட்டியும் சிகரெட்டும் தவிர உங்களுக்கு அத்தியாவசியமான தேவைகள் எதுவுமில்லை.

காம்ரேட் : நீ ஏன் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாய்!

லட்சுமி : எனக்கு எல்லாம் புரிகிறது. உங்களோடு வாழ்ந்து ஒரு வயது காலம் கழிந்தாகிவிட்டது. எனக்கு

உங்களைப் பற்றித் தெரியாவிட்டால் வேறு யாருக்குத் தெரியப் போகிறது? நான் என் மனதை எவ்வளவோ கட்டுப்படுத்திக் கொண்டாகிவிட்டது. எவ்வளவோ தைரியப் படுத்திக் கொண்டேன். ஆனால் இனியும் என்னால் சகித்துக் கொள்ள முடியாது. இந்தப் பணத்தில் நான் முதலில் வீட்டுக்குத்தான் மளிகை சாமான்கள் வாங்குவேன். பிறகு எனக்குத் துணிமணி...மீதமிருப்பதை பத்திரமாக வைத்துக் கொள்வேன். ஆனால் ஒன்று மட்டும் சொல்லுகிறேன்—நீங்கள் குடிக்கக் காசு கிடைக்காது.

காம்ரேட் : இதோ பார்! லட்சுமி! உனக்கு என்னை நன்றாகவே தெரியும். நான் ஒரு காம்ரேட். ஊருக்குள் எனக்கு நல்ல பெயர், செல்வாக்கு இருக்கிறது. நீ என் மனைவி. நான் இங்குமங்கும் கையை நீட்டி லட்சக் கணக்காய் ரூபாய் திரட்டினாலும் வெளியே சொல்லிக் கொள்ள முடியாது. நன்றாக உடை உடுத்த முடியாது. பணக்கார வாழ்க்கை வாழ முடியாது. ஏன் என்றால், நம் மீது ஒரு முத்திரை குத்தப்பட்டிருக்கிறது. அதன் காரணமாகத்தான் மக்கள் என்னை, நம்மை மதிக்கின்றனர்.

லட்சுமி : அந்த மதிப்பும், மரியாதையும் நாசமாய் போகட்டும். அதற்காக நீங்கள் உங்களையே இழந்து விட்டீர்களே!

காம்ரேட் : ஒன்றைப் பெறுவதற்காக ஒன்றை இழக்கத்தான் வேண்டும். பாண்டவர்களையே எடுத்துக் கொள். தங்களுடைய அரசுரிமையை அடைவதற்காக, அவர்கள், தங்களுக்கு மிகவும் பிரியமான அர்ஜுனன் மகன் அபிமன்யூவை இழக்க நேரிட்டது. இராவணன் சுவர்க்கத்தை அடைய தன் பொன்னிலங்கையை இழந்தான். சுக்ரீவன் தன் மனைவியைத் திரும்பப் பெற வேண்டி, மகா பலவானான தன் அண்ணன் வாலியை வதம் செய்வித்தான். இப்படி எத்தனையோ உதாரணங்களைக் கூறலாம். நீ தான் கீதை படிக்கிறாயே! அதில் பகவான் கிருஷ்ணன் என்ன சொல்லுகிறார்! கடமையைச் செய், பலனைக் கருதாதே!

லட்சுமி : உங்களுக்கு எத்தனை ரூபாய் வேண்டும்?

காம்ரேட் : இருநூறு ரூபாய் மட்டும் தான்.

லட்சுமி : இப்பொழுதே தரட்டுமா! அப்புறம் வாங்கிக் கொள்கிறீர்களா?

காம்ரேட் : வேண்டாம், தனியாக எடுத்து வைத்துவிடு. பிறகு எடுத்துக் கொள்கிறேன்.

லட்சுமி : சரி.

(லட்சுமி வந்த வழியே திரும்பிச் செல்லுகிறாள். அவள் சென்ற பின்—காம்ரேட், ஹூம்...இரு—இரு. இப்பொழுதே கொடுத்துவிடு...என்று கூறியவாறே அவள் பின்னே செல்லுகிறார். ஒளி அணைகின்றது. இந்த இருட்டில் அரங்கின் மீதுள்ள நாற்காலிகள், மேஜையை எடுத்துவிடலாம். காம்ரேட்டின் வீடு என்பதைக் காட்டும் கார்ல் மார்க்ஸ்ஸின் படத்தை திருப்பி மாட்டிவிடலாம். அரங்கத்தின் மையப் பகுதியில் ஒளி வட்ட வடிவமாக விழுகின்றது. அதில் முந்திய நால்வரும் பிறைச் சந்திர வடிவத்தில் நிற்பது தெரிகின்றது. ஒரு குரூப் பேசும்போது, மற்றொரு குரூப் சிலையாக நிற்கிறது]

முதலாமவன் : அரே! நேற்று நம்ப டிகிட்ட மோதிக்கிட்டேன். சாலா...... வேண்டுமென்றே என் மீது தன் அதிகாரத்தைக் காட்டறான். நீ சரியாக வேலை செய்யவில்லை. உன்னை சஸ்பெண்ட் செய்துவிடுவேன் என்று மிரட்டுகிறான். நானும் சரியாக பதிலடி கொடுத்தேன். உன்னால் அதிக பட்

சம் வேறென்ன செய்துவிட முடியும்? ஆனால் இதற்கு மட்டும் பதில் சொல்லு! அந்த தேவராஜ் என்ன உனக்கு மாமனா...சம்பளம் வாங்க மட்டும் வருகிறானே! என்று கேட்டேன். அவ்வளவுதான். தொண்டை அடைச்சுகிட்டது. வாயிலிருந்து ஒரு வார்த்தை வெளியே வரலை.

இரண்டாமவன் : யார் அந்த தேவ ராஜு.

முதலாமவன் : ரெவின்யூ மந்திரியின் ஆள்.

இரண்டாமவன் : அது சரி. இருந்தாலும் நீ அப்படி பேசியிருக்கக் கூடாது. வேலை பார்க்க வேண்டுமென்றால் மேலதிகாரிகளிடம் உறவு நன்றாக இருக்க வேண்டும். இந்த வேலை எவ்வளவு கஷ்டப் பட்டுக் கிடைத்தது என்பது உனக்கு தெரியுமல்லவா?

[இருவரும் மௌனமாகிவிட மற்ற இருவரும் பேசுகின்றனர்]

மூன்றாமவன் : அரே ! ஒரு கஷ்டம் வந்துவிட்டதப்பா ! யூனிவர்சிடியில் இடம் கிடைக்கவில்லை. நான் வி.சி. யையே போய் நேரில் பார்த்துவிட்டேன். சாலா...மசியமாட்டேன் என்கிறான். யாருக்கு அதிகமான மார்க் கிடைத்திருக்கிறதோ அவர்களுக்கு தான் முன்னுரிமை அளிக்கப்படும் என்கிறான். யாரிடமாவது சிபார்சு பிடிக்காமல் காரியம் ஆகாது போலிருக்கிறது. யாராவது குல்லாய்க்காரனைப் பிடித்து முகஸ்துதி செய்ய வேண்டும்.

நான்காமவன் : அப்படி இந்தப் படிப்பில் என்னடா இருக்கிறது. விட்டுத் தள்ளு. ஏதாவது தொழில் துவங்கு. அதிகமாகப் படித்தும் சும்மாத்தான் இருக்க வேண்டியிருக்கிறது. இப்பொ—கல்லூரிக்குள் நுழைய யார் காலையாவது பிடிக்க வேண்டும். பிறகு வேலைக்காக, பிறகு மாற்றலுக்காக... இப்படியே ஆயுள் முழுவதும் யாரையாவது கெஞ்சிக் கொண்டே, ஸ்துதி பாடிக் கொண்டே இருக்க வேண்டும்.

[இருவரும் மௌனமாகிவிட மற்ற இருவரும் பேசத் துவங்குகின்றனர்]

முதலாமவன் : இந்த வேலையென்ன பிரமாதம். இது எனக்கொரு ஹாபி... பொழுது போக்கு, அவ்வளவுதான். ஏதோ தானம் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்ளேன். சர்கார் பணம். அது கொடுக்கிற வரையில் சாப்பிட வேண்டியது. இதில் யாருக்கு என்ன கஷ்டம்? மற்றபடி நம்ப பிஸினெஸ் தான் நடந்து கொண்டிருக்கிறதே.

இரண்டாமவன் : அப்ப நீ வேலை செய்ய வேண்டிய அவசியம்தான் என்ன? விட்டுவிடேன். வேறு யாருக்காவது உதவும். இடத்தைக் காலி பண்ணு. வீணாக ஏன் இரண்டு திசையிலும் தாவுகிறாய்?

[இருவரும் மௌனமாக, மற்ற இருவரும் பேசத் துவங்குகின்றனர்.]

மூன்றாமவன் : உனக்குத் தெரியுமா? நான் ரொம்ப குஷிப் பேர்வழி. உல்லாசமாக வாழ்பவன். கடவுள் அருளாலே சாப்பாட்டிற்கும் வேண்டியது இருக்கிறது. ஆனால் பொழுதை உல்லாசமாகக் கழிக்க நண்பர்கள் தேவைப் படுகின்றனர். அவ்வளவுதான்.

நான்காமவன் : அப்போ! நீ வடி கட்டின முட்டாள். என்னைப் பார்......... காண்ட்ராக்ட் எடுக்கிறேன். பணமும் சம்பாதிக்கிறேன். சுகபோகமாக வாழவும் செய்கிறேன். பெரிய பெரிய மனிதர்களுடன் சகவாசம், சந்திப்பு, எல்லாம். ஆபீஸிலுள்ள இந்த டீ., எஸ். ஈ யை எல்லாம்...நான் நாயைப் போல் ட்ரீட் பண்றேன்.

[விளக்கு அணைகிறது. எல்லோரும் இடம் மாறுகின்றனர். முதலாமவனின் இடத்தில் இரண்டாமவன். இரண்டா

மவனின் இடத்தில் முதலாமவன். இதே போல் மூன்றாமவனும், நான்காமவனும் இடம் மாறுகின்றனர். மீண்டும் ஒளி பரவுகின்றது].

முதலாமவன் : உனக்குத் தெரியுமா? மந்திரி சபையில் புதியதொரு சட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளதாம்.

இரண்டாமவன் : அது என்னவாம் !

முதலாமவன் : நம்முடைய தேசியக் கொடியுடன் இன்னொரு கொடியும் சேர்க்கப்படும். அதில் குரங்கின் படம் இருக்குமாம்.

இரண்டாமவன் : என்னது?

முதலாமவன் : அதாவது நாம் நமது பழமையான கலாசாரத்தை மறக்கக் கூடாதாம்.

இரண்டாமவன் : என்னப்பா......கிண்டலா செய்கிறாய்?

முதலாமவன் : வேடிக்கையில்லையப்பா. இது உண்மை. பத்திரிகை படித்தால்தானே தெரியப் போகிறது?

இரண்டாமவன் : குரங்கு பழய கலாசாரத்தின் சிம்பள் ஆக இருக்கலாம்.

முதலாமவன் : மேலும் இன்னுமொரு யோசனையையும் நிறைவேற்றி இருக்கிறார்கள். அதாவது ஒவ்வொரு அசெம்பளி ஹாலிலும், பார்லிமெண்டிலும் உயிருடன் இருக்கும் குரங்கொன்றை வைக்க வேண்டும். எவ்வளவு தூரம் முன்னேறி இருக்கிறோம் என்பதை அதனுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம் அல்லவா?

இரண்டாமவன் : அப்படியென்றால் நாம் மீண்டும் குரங்கு வளர்ப்பை ஆரம்பித்துவிடலாமா?

(முதலாமவனும் இரண்டாமவனும் பேசாமல் நிற்கின்றனர்)

மூன்றாமவன் : ஏய் நீ அந்தப் பறவையைப் பார்த்திருக்கிறாயா? இல்லையில்லை. பார்த்திருக்கமாட்டாய்.

நான்காமவன் : எந்தப் பறவையை?

மூன்றாமவன் : உன் அப்பா பார்த்திருப்பார்.

நான்காமவன் : என்னது?

மூன்றாமவன் : உன் அப்பா இல்லை. உன் தாத்தா நிச்சயம் பார்த்திருப்பார். உன் அப்பாவிற்காக மறைத்து வைத்திருக்கக் கூடும். அது உன் அப்பாவின் பிதிர்ராஜித சொத்தாக உனக்கு கிடைக்கட்டுமென்று வைத்திருக்கலாம்.

நான்காமவன் : என்ன உளறுகிறாய்? என்ன பறவை அது?

மூன்றாமவன் : தங்கப் பறவை.

நான்காமவன் : தங்கப் பறவையா?

மூன்றாமவன் : ஆமாம், ஆமாம். தங்கப் பறவை. நம்முடைய இந்தியா. இந்தியா தங்கப் பறவையாக இருந்தது என்று சொல்லுகிறார்கள் அல்லவா? நீ அந்தப் பாடலைக் கேட்டிருக்கமாட்டாய்! மரத்தின் ஒவ்வொரு கிளையிலும் தங்கப் பறவைகள் தங்குகிற நாடு எங்கள் பாரத நாடு. நண்பா! அந்தக் கிளைகள் எங்கேயுள்ளன? இல்லை என்றால் அவைகள் எங்கே போயின?

நான்காமவன் : அது இருக்கிறது. ஆனால் கடத்தல்காரர்களின் கையில் இருக்கிறது. பறவைகளோ தலைவர்களின் பட்சி சாலையில் குடியேறியுள்ளன. ஏன் என்றால் நாட்டின் செல்வங்களின் லகான், அவற்றை காக்கும் பணி அவர்களின் கையில் அல்லவா இருக்கிறது.

[விளக்கு அணைகிறது. யாவரும் இடம் மாறுகின்றனர். முதலாமவனின்

இடத்தில் நான்காமவனும், நான்காம வனின் இடத்தில் முதலாமவனும் மாறு கின்றனர். இரண்டாமவனும் மூன்றா மவனும் இதே போல் இடம் மாறுகின் றனர். மீண்டும் ஒளி படருகிறது]

முதலாமவன் : தம்பி! தேர்தல் வந்து விட்டது. தயாராக இரு.

இரண்டாமவன் : நான் தயாராகத் தான் இருக்கிறேன்.

முதலாமவன் : இந்த வருடம் எந்தப் பார்ட்டிக்கு ¶கர்ன்வசிங் செய்ய வேண் டும்?

இரண்டாமவன் : எந்தக் கட்சி கொடுக் கவும் கொடுத்து, செலவும் செய்கி றதோ, அந்தக் கட்சிக்குத்தான் நான் வேலை செய்வேன். போனதடவை யின் அனுபவம் எனக்கு இருக்கிறது. வேலை செய்து மடிந்து போனாலும் கைக்கு எதுவும் வருவதில்லை. பிறகு அனாடமியின் போது பிரசங்கத்தை வேறு கேட்டாக வேண்டும்.

முதலாமவன் : போன தேர்தலில் எனக்கு ரொம்ப மஜாவாக இருந்தது. ஜேபியில் நோட்டு. நல்ல சொகுசு வேறே. நாலு ஜீப் என் டிஸ்போசலில். பின் என்ன? மஜாதான், எங்கு வேண்டு மானாலும் சுற்றிவிட்டு வரவேண்டியது தான்...நான் என்ன சொல்றேன்னா. தேர்தல் வருஷா வருஷம் நடக்க வேண்டும்.

இரண்டாமவன் : என்னையும் அப்படி ஏதாவதொரு இடத்தில் சேர்த்து விடப்பா...

முதலாமவன் : முயற்சி செய்து பார்க் கிறேன். இதோ பாரு! என்னிடம் பிர மாதமான ஒரு திட்டம் இருக்கிறது.

இரண்டாமவன் : அதென்ன?

முதலாமவன் : நீயும் தேர்தலுக்கு நின்றுவிடு.

இரண்டாமவன் : என்ன சொல்லுகி றாய் நீ! ஏன் மண்டை குழம்பிவிட்டதா?

முதலாமவன் : என்ன மூளை கெட்டவ னாய் இருக்கிறாய் நீ! தேர்தலில் நிற்கிறவர்களுக்கெல்லாம் மூளையா குழம்பிவிட்டது! பயித்தியக்காரர்களா அவர்கள்!—என் அருமை நண்பா! இது பெரிய சமூக சேவையடா...

இரண்டாமவன் : குப்பையில் போடு சமூக சேவையை. வயிற்றுச் சேவை யைப் பற்றி பேசு.

முதலாமவன் : சற்று பொறுமையாக இரு. நான் அதைப் பற்றித்தான் பேசு கிறேன். உனக்கு கொஞ்சம்தான் செல வாகும். செக்யூரிடி கட்ட. பப்ளிசிடி... அவ்வளவுதான். அதிகமில்லை.

இரண்டாமவன் : அப்புறம்?

முதலாமவன் : பிறகென்ன? யாராவது கணிசமான தொகையைத் தரத் தயா ராக இருந்தால் நீ அவனுக்கு விட்டுக் கொடுத்துவிடு. கிடைப்பதை ஆளுக்குப் பாதி பங்கிட்டுக் கொள்ளலாம்.

இரண்டாமவன் : இதற்கு யாரும் தயா ராக இல்லாவிடில்?

(முதலாமவனும் இரண்டாமவனும் பேசாமல் நிற்கின்றனர்)

மூன்றாமவன் : எனக்கு இந்த வாழ்க் கையே வெறுத்துப் போச்சுப்பா! எங்கேயாவது ஓடிப்போய் தாறுமாறாய் எதையாவது செய்யனும் போலத் தோன்றுகிறது.

நான்காமவன் : ஏன்! என்ன விஷயம்?

மூன்றாமவன் : வேறென்ன? எல்லாம் வீட்டு விவகாரம்தான். நானென்ன செய்தாலும் எல்லோருமாய் என் மீது பாய்கிறார்கள். மூத்தவன் என்ன செய்தாலும் யாரும் எதுவும் கேட்ப தில்லை.

நான்காமவன் : உன்னை என்ன சொல்லுகிறார்கள்?

மூன்றாமவன் : சொல்லுவதென்ன? சும்மா ஏதேனும் குற்றம் குறை கண்டு பிடித்துக் கொண்டே இருக்கிறார்கள். ஏதாவது சண்டை சச்சரவு ஏற்பட்டு விடுகிறது. உபயோகமில்லாதவனுக்கெல்லாம் இங்கு இடமில்லை என்கிறார்கள். வேலையில்லாதவனுக்கு ஒரு வரும் சாப்பாடு போடுவதில்லை. இங்குமங்கும் சுற்றி அலைந்துவிட்டு இங்கு வந்து படுக்க இது சத்திரம், சாவடி இல்லை என்கிறார்கள்.

நான்காமவன் : இந்த நிலைமை உனக்கு மட்டுமல்ல. எல்லோருக்கும் தான். இந்த விஷயத்திற்காக மனம் தளர்ந்து போனால் காரியம் நடக்காது.

மூன்றாமவன் : பிறகு ஏதாவது வழி சொல்லு. என்ன செய்யலாம்?

நான்காமவன் : ஸ்கீமைச் சொல்லுகிறேன். எத்தனை வேண்டுமானாலும் ஸ்கீம் என்னால் சொல்ல முடியும். ஆனால் அதற்கு மூட் வர வேண்டும். எங்கேயாவது தனிமையில் சென்று உட்கார வேண்டும். அப்படி உட்கார ஏதாவது ஏற்பாடு இருக்கிறதா?

[விளக்கு அணைகிறது. மீண்டும் வெளிச்சம் பரவுகிறது. யாவரும் நெருங்கி வந்து பிறை சந்திர வட்டமாக உட்கார்ந்திருப்பது தெரிகிறது.]

முதலாமவன் : இந்த செட் அப்பை அமைப்பை மாற்றியாக வேண்டும்.

இரண்டாமவன் : இல்லை. நம்மை நாமே மாற்றிக் கொள்ள வேண்டும்.

மூன்றாமவன் : இல்லை; எதையும் மாற்ற வேண்டிய அவசியமில்லை. தேவை புதிய சிந்தனை.

நான்காமவன் : தம்பி! சிந்திப்பதால் ஏதும் நடக்காது. இன்றயத் தேவை, புதிய செயல் முறை.

முதலாமவன் : ஆப்டர் ஆல் வி ஆர் மென். நாம் மனிதர்கள். மனிதர்களாக வாழ விரும்புகிறோம்.

இரண்டாமவன் : இல்லை. மனிதர்கள் அல்ல, மானிடனாக என்று சொல்லு. மனிதனைவிட மானிடனிடம் அதிக குணங்கள் உள்ளன.

மூன்றாமவன் : குணங்களைக் குப்பையில் போடு. நான் சொல்லுவதைக் கேள். பொம்மையாக வாழக் கற்றுக் கொள். அதற்கு கொஞ்சம் மதிப்பிருக்கிறது.

நான்காமவன் : எல்லாவற்றையும் விடச் சிறந்தது, அழகிய நாயாக வாழக் கற்றுக் கொள். சாப்பிட பிஸ்கட். உறங்குவதற்கு டன்லப் படுக்கை கிடைக்கும்.

முதலாமவன் : வாழ்க்கை ஒரு சிக்கல். குழப்பம்.

இரண்டாமவன்: வாழ்க்கை ஒரு கனவு.

மூன்றாமவன் : இல்லை. அதுவொரு தாகம். தணியாத தாகம்.

நான்காமவன் : இல்லை. அது ஆனந்தம்.

எல்லோருமாய் ஒருமித்த குரலில் : வாழ்க்கை என்பதென்ன? யாராவது சொல்லுங்கள்.
வாழ்க்கை என்பதென்ன? எங்களைப் பொறுத்த வரையில் வாழ்க்கை என்பது ஒன்றுமேயில்லை?...
ஒன்றுமேயில்லை....

[ஒளி அணைகின்றது நால்வரும் அரங்கைவிட்டு வெளியேறுகின்றனர். பிறகு இடதுபுற, வலதுபுற விளக்குகள் ஒளிர்கின்றன. ஆணும், பெண்ணும் எதிர் எதிர் பக்கத்திலிருந்து அரங்க மேடைக்கு வருகின்றனர்.]

ஆண் : வாழ்க்கை ஒரு அழகிய மலர். இப்பொழுது அது வாடிவிட்டது.

பெண் : வாழ்க்கை ஒரு லாந்தர் விளக்கின் ஒளி. இப்பொழுது அது படபடவென அலை பாய்கிறது.

ஆண் : வாழ்க்கை இளமையானவனாக இருந்தது. இப்பொழுது கிழடாகிவிட்டது.

பெண் : வாழ்க்கை மிக அழகாக இருந்தது. இப்பொழுது அழகற்றுவிட்டது.

ஆண் } ஓ! வாழ்க்கை எப்படி மாறிவிட்
பெண் } டது!

ஆண் : ஒவ்வொருவரும் வாழ்க்கையினுடைய பிரிஸ்கிரிப்ஷனை ஜேபில் வைத்துக் கொண்டு மருந்தைத் தேடுகின்றனர். மருந்து கிடைப்பதில்லை.

பெண் : ஒவ்வொருவரும் வாழ்க்கையெனும் அகராதியைத் தேடி அதன் அர்த்தத்தைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் தனக்காக மட்டும் தான். பிறருக்காக அல்ல.

ஆண் : மற்றவர்களுக்காக அவன் இத்தேடலின் காரணத்தைத் தேடிக்கொண்டிருக்கிறான். அதாவது அவன் ஏன் உயிரோடு இருக்கிறான். அவன் உயிர் வாழக் கூடாது என்பதுதான்.

பெண் : ஒவ்வொருவனிடமும் சுயநலம் குடி கொண்டிருக்கிறது,

ஆண் : சுயநலம் மனிதனின் சத்ரு.

பெண் : சுயநலம் காலனின் அடையாளம்.

ஆண் : முற்போக்கு வாதிகள் வெறும் முற்போக்குவாதிகள்தான் — காகிதப் புலிகள்.

பெண் : அவர்களது சீடர்கள் அவர்களையும் மிஞ்சிவிட்டனர்.

ஆண் : காலத்தின் சுழற்சியில் இன்னுமொரு அலை அடித்தது. எல்லோருடைய குட்டும் வெளிப்பட்டுவிட்டது.

பெண் : மக்களின் எண்ணங்கள் வெடித்தெழுந்தன. தங்களுக்கு இழைக்கப்படும் அநியாயத்திற்கு பழிவாங்க விரும்பினர்.

ஆண் : வலுவான இக்கரங்களின் சுயாபிமானமும், கௌரவமும் நன்னடத்தையெனும் இக்கதிரவனின் மீது படிந்துள்ள புழுதியை துடைத்தெறியும் எனத் தோன்றுகிறது.

பெண் : இக்கரங்களின் விரல்கள், இணையற்ற குணநலன்களின் இருப்பிடம். தங்கள் திறமையினால் இக்கறுப்புச் சூரியனில் படர்ந்துள்ள கருமையை அகற்றிவிடுவார்கள். ஆனால் இதன்பால் அவர்களின் கவனம் செல்லவேயில்லை.

பணம் படைத்தவன் பிறர் முன்னே எத்தனை அப்பாவியாகத் தன்னைக் காட்டிக் கொள்கிறானோ அத்தனைக்கத்தனை அவன் கெட்டிக்காரன்.

பெண் : இரட்டை வேடம் போடுபவன் நாசம் அடைகிறான்.

ஆண் : சரி-தப்பு என்று முடிவு கட்டுவதிலேயே தன் வாழ்க்கையை அவன் கழித்துவிடுகிறான்.

பெண் : எல்லோர் மனத்திலும் சமத்துவம் என்ற எண்ணம் குடியேறிவிட்டது.

ஆண் : எல்லோரும் முதலாளித்துவத்தை அகற்ற விரும்புகின்றனர்.

பெண் : யாவரும் மனிதனாக வாழ விரும்புகின்றனர்.

ஆண் : புரட்சியின் புதிய அலை எழுகின்றது.

பெண் : எங்கும் குழப்பம் பரவியது.

ஆண் : அனார்கியின் அறிகுறிகள் தென்படலாயின.

பெண் : காம்ரேட்ஸ் கம்யூனிசத்தின் பாலுள்ள நம்பிக்கையில் உறுதி கொண்டு களத்தில் இறங்கிவிட்டனர்.

ஆண் : ஜனநாயகவாதிகள், ஜனநாயகத்தைக் காப்பாற்றச் சுறுசுறுப்புடன் இயக்கத் துவங்கினர்.

பெண் : சோஷலிஸ்டுகள், சோஷலிசத்தை லட்சியமாகக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டனர்.

ஆண் : ஆனால் உள்ளுக்குள் ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்வதில் முனைந்திருந்தனர். தன்னை மட்டும்தான்.

பெண் : எல்லோரும் தங்கள் சொத்து, சுகம், பணம் காசு பற்றிய கவலையிலாழ்ந்திருந்தனர்.

இருவருமாய் : எல்லோருக்கும் அவர் அவரைப் பற்றிய கவலைதான். ஆனால் அதிலும் நல்லெண்ணம் இல்லை. தன்னைப் பற்றிக்கூட நேர்மையாக அவர்களால் சிந்திக்க முடியவில்லை.

[விளக்கு அணைகிறது. இதற்குள் காம்ரேட்டின் இல்லம் இருக்கும் பகுதியில் ஒளி பளிச்சிடுகிறது. கார்ல் மார்க்ஸின் படம் இப்பொழுது நேராக மாட்டப்பட்டுள்ளது. நாற்காலிகள் தேவையில்லை. பந்தூவும் காம்ரேடும் மட்டும் நிற்கின்றனர்]

காம்ரேட் : இப்படி திடீர் திடீரென்று வந்து நிற்காதீர்கள் என்று எத்தனை முறை உங்களிடம் சொல்லியிருக்கிறேன். அதிலும் இச்சமயம் நாட்டில் ஏகப்பட்ட குழப்பமாக இருக்கிறது.

பந்தூ : ஹி...ஹி...ஹி...அதனால் தானே உங்களிடம் வந்திருக்கிறேன். தங்களிடம் கலந்து ஆலோசிக்கலாம், தங்களுடைய நடவடிக்கைகளைப் பற்றி தெரிந்து கொள்ளலாமே என்று நினைத்தேன். நாமிருவரும் பழைய பிஸினஸ் பார்ட்னர்கள் தானே? புதிதல்லவே! மிஸ்டர் காம்ரேட்...ஹி...ஹி ...ஹி.

காம்ரேட் : நாம் எப்படியிருந்தோம்! நமது உறவுகள் எப்படியிருந்தன என்பதையெல்லாம் இந்த சமயத்தில் சுத்தமாக மறந்துவிடுவதுதான் மிகவும் நல்லது. மிஸ்டர் பந்தூ...இந்த சமயம் நிலைமை ரொம்பவும் சரியாக இல்லை. நமக்குள் தொடர்பு ஏதேனும் வைத்துக் கொள்ளுவது ஆபத்தானது.

பந்தூ : ஹி...ஹி...ஹி...இதென்ன இப்படிச் சொல்லுகிறீர்கள் காம்ரேட் ஜீ! நம்முடைய நெடு நாளைய நட்பை ஒரு நிமிடத்தில் மண்ணாக்கி விட்டீர்களே! இத்தனை நாட்களாக எதுவும் நேரிடவில்லை. இப்பொழுது அப்படியென்ன நேரிட்டுவிடும்! நீங்கள் கவலைப் படாமல் இருங்கள்.

காம்ரேட் : அப்படி ஏதும் நேரிடப் போவதில்லை என்றாலும், மிஸ்டர் தற்சமயம் நான் உங்களுடன் எந்த உறவோ, தொடர்போ வைத்துக் கொள்ள விரும்பவில்லை. இச்சமயம்—''அனார்கி'' யின் அறிகுறிகள் எனக்குத் தென்படுகின்றன. ''அனார்கி'' ஏற்பட்டுவிடும் என்பதில் எனக்கு முழு நம்பிக்கையுள்ளது. பிறகென்ன? எங்கள் யுகம் பிறந்துவிடும். எனது யுகம். காம்ரேட் ரவிகாந்தின் யுகம்...ஹ...ஹ ...ஹ...பிறகென்ன? உங்களைப் போன்றவர்கள் எங்கள் காலடியில் இருப்பார்கள். மிஸ்டர் பந்தூ! அந்த நாட்கள் வரத்தான் போகின்றன. அதனால் தயவு செய்து, என்னிடம் வருவது இருக்கட்டும். என் பெயரைக்கூட நீங்கள் வாயால் சொல்லக் கூடாது. தெரிந்ததா?

பந்தூ : காம்ரேட்ஜி! நீங்கள் அனாவசியமாய் இத்தனைக் கவலைப்படுகிறீர்கள். எனக்கு அப்படியெல்லாம் ஏற்படும் என்று தோன்றவேயில்லை.

காம்ரேட் : ஆனால் எனக்குத் தோன்றுகிறது. தாங்கள் இங்கிருந்து போய்விடுவதுதான் நல்லது. ப்ளீஸ். இது எனது கௌரவப் பிரச்சனை! யாராவது பார்த்துவிட்டால் நீங்களும் சாக வேண்டியிருக்கும். என்னுடைய சாவும் நிச்சயம்.

பந்தூ : காம்ரேட்ஜி! ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் சாகத்தானே வேண்டும். அப்புறம் சாவது பற்றி என்ன பயம்? சாவுக்காக பயந்து நமது உறவை ஏன் துண்டித்துக் கொள்ள வேண்டும். உங்களுக்கே தெரியும். ஆரம்பத்திலிருந்தே நான்தானே உங்களுக்கு பொருளுதவி செய்து வருகிறேன்.

காம்ரேட் : அது உதவி அல்ல. கொடுக்கல் வாங்கல். ஆனால் இப்போ தவணை முறையில் அல்ல ஒட்டு மொத்தமாகவே வாங்கிக் கொள்ளப் போகிறேன். அதுகூட எதற்காவது, பதிலுக்காக அல்ல. எனது உரிமையென்று எடுத்துக் கொள்வேன். நீங்கள் கவலைப் படாதீர்கள். உங்களுக்கு இரும்புப் பெட்டிகளைத் திறக்கும் சிரமம் கூடத் தரமாட்டோம். சாவிகளைப் பறித்துக் கொள்வோம். வேலைகளை நாங்களே பார்த்துக் கொள்வோம். இத்தனை நாள் ஒத்துப் போக முடிந்தது. போனோம். இனி ஒத்து வராது. எங்களுடைய வழி வேறானது. மாறுபட்டது. எனக்கும் உங்களுக்குமிடையே இருந்த பேட்ச் அப்...முடிந்தது.

(முதலாமவன் திடீரென உள்ளே வருகிறான். இருவரையும் பார்த்து அப்படியே நின்றுவிடுகிறான். காம்ரேட் அவனைக் கண்டதும் பேச்சை மாற்றுகிறான். பந்தூவை நோக்கி —) ''உனக்கு இங்கே வர எப்படி தைரியம் வந்தது? நீ என்னை விலைக்கு வாங்க விரும்புகிறாயா? காம்ரேட் ரவிகாந்தை விலைக்கு வாங்கிவிடலாம் என்று நினைக்கிறாயா?

[பந்தூவின் மென்னியைப் பிடிக்கிறான்].

பந்தூ : காம்ரேட்ஜி ! உங்களுக்கென்ன வந்துவிட்டது?

காம்ரேட் : ஷட் அப். உங்களையெல்லாம் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத வரையில் உங்களுக்கெல்லாம் புத்தி வராது.

[முதலாமவன் சிரித்துக் கொண்டே வெளியேறுகிறான்]

எது நடக்கக் கூடாதென்று இருந்தேனோ அது நடந்துவிட்டது. என் அப்பனே இனிப் போய்விடப்பா! இன்னமும்கூட போக மனது வரவில்லையா?

(பந்தூ முகத்தைத் தொங்க போட்டுக் கொண்டு பின்புறக் கதவு வழியாக செல்லப் பார்க்கிறான்.)

இனி அந்த வழியாகப் போக வேண்டிய அவசியமில்லை. முன் வாசல் வழியாகவே போகலாம். எது நடக்கக் கூடாதோ அது நடந்துவிட்டது. இனி என்ன நடக்க வேண்டுமோ நடக்கட்டும்.

[பந்தூ போய்விடுகிறான். காம்ரேட் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு தனக்குத் தானே பேசிக்கொள்கிறான்.]

நேரம் சரியில்லை போலிருக்கிறது. அதனால்தான் இப்படி. ஏறுமாறாய் எல்லாம் நடக்கிறது. நேரம் நல்லதாக இருந்தால் என் லக்ஷிமி கோபித்துக் கொண்டு பிறந்தகம் போயிருப்பாளா? என்ன நடக்கப் போகிறதோ! தெரியவில்லை. ஏதாவது ஒன்று நிகழ்வதற்கு முன் என்னை நானே சமாளித்துக்

கொள்ள வேண்டும். இந்த சின்ன விஷயத்தை அவர்கள் மனத்திலிருந்து அகற்றுவது அத்தனை பெரிய விஷயமொன்றுமில்லை. என் மீது கண் மூடித்தனமாக நம்பிக்கையுண்டு அவர் களுக்கு. நான் சொல்வதையெல் லாம் கேட்கின்றனர். என் மீது அவர் களுக்கு பரிபூர்ண நம்பிக்கையுண்டு !

[அந்நால்வரும் ஒவ்வொருவராக உள்ளே வருகின்றனர்]

முதலாமவன் : எங்களுக்கு உண்மையிலேயே உங்கள் மீது பரிபூரண நம்பிக்கை இருந்தது.

இரண்டாமவன் : பூரண நம்பிக்கை. பிளையண்ட் பெயித்.

காம்ரேட்: ஹும்......என்ன நடந்தது? என்ன விஷயம்?

மூன்றாமவன் : நாங்கள் உங்களை அதிகம் தேட வேண்டி நேரவில்லை.

நான்காமவன் : நீங்கள் வீட்டிலேயே இருப்பீர்கள் என்று...

காம்ரேட் : ஹே...என்னது? ஆமாம்... ஆமாம்...நான் எங்கே போய்விடப் போகிறேன். பெரும்பாலும் வீட்டிலே தானே இருக்கிறேன்.

முதலாமவன் : வெளியேயும் போக முடியும்.

இரண்டாமவன் : காலம் ரொம்ப கொடுமையானது. காலத்தை நம்புவது எப்படி?

காம்ரேட் : தோழர்களே! நமக்கு நம் மீது நம்பிக்கை வேண்டும். காலம் நம் பின்னால் நாயைப் போல் சுற்றிக் கொண்டிருக்கும்.

இரண்டாமவன் : நாய் வாலை ஆட்டி தனது நன்றியைத் தெரிவிக்கும் என்றாலும், கோபம் கொண்டு குலைக்கவும் செய்யும். கடிக்கவும் கடிக்கும், இல்லையா!

காம்ரேட் : இதென்ன விதண்டா வாதம்? நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

நான்காமவன் : நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே! அதைத்தான்.

காம்ரேட் : அப்படியென்றால்?

முதலாமவன் : நாங்கள் உங்களிடம் வெளிப்படையாகவே பேச விரும்புகிறோம்.

காம்ரேட் : ஓ...எஸ்...நானும்கூட உங்களைத்தான், எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். உட்காருங்கள்.

மூன்றாமவன் : நாங்கள் உட்கார்ந்து, உட்கார்ந்து ஓய்ந்துவிட்டோம். இன்று நின்று கொண்டிருக்க விரும்புகிறோம்.

காம்ரேட் : நாடெங்கும் ஏற்பட்டிருக்கும் கிரைசிஸ்...நெருக்கடி நிலையைப் பார்க்கும் போது, நம்முடைய நேரம் வரப் போகிறது என்று தோன்றுகிறது. தோழர்களே! இந்த முதலாளிகளின் பங்களாக்களைச் சூறையாடத் தயாராகுங்கள். இவர்களின் தொழிற்சாலைகளை கைவசப்படுத்திக் கொள்ள தயாராகுங்கள். இந்தக் கெடுபிடியிலும், குழப்பத்திலும் எனக்கு 'அனார்கி'யின் அறிகுறிகள் புலனாகின்றன. அனார்கி......அதாவது புரட்சிக்குப் பின்தான் சமத்துவ சமுதாயம் மலர முடியும். பொது உடமை நிலவும்.

மூன்றாமவன் : காம்ரேட்ஜி! ஃபார் யுவர் கயின்ட் இன்பர்மேஷன் "அனார்கி" வந்துவிட்டது.

காம்ரேட் ; வாட்? அனார்கி வந்துவிட்ட தென்றால் நாம் வீணாக இங்கு நின்று கொண்டு என்ன செய்கிறோம். ஆக்ஷனைத் துவங்க வேண்டும். உங்களுடைய

டார்கெட் என்னவென்று தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். திட்டமிடுங்கள். ப்ளான்! முதல் அட்டாக்கில் நான் நிச்சயமாய் உங்களுடன் இருப்பேன்.

நான்காமவன் : பிளான் போட்டாகிவிட்டது. காம்ரேட் சாகப்! கவலைப் படாதீர்கள், முதல் தாக்குதலை நாங்கள் உங்களிடமிருந்தே துவக்கப் போகிறோம்.

காம்ரேட் : என்னது?

முதலாமவன் : அதாவது இரண்டாவது தாக்குதலுக்குள், காம்ரேட் ரவிகாந்த் என்னும் டிப்ளமேட் இந்த மண்ணுலகத்தில் இருக்க மாட்டார்.

இரண்டாமவன் : இவனை காம்ரேட் என்று கூறி நீ நம்மையே அவமதித்துக் கொள்கிறாய். இவன் ஒரு எக்ஸ்ப்ளாயிடர்......

காம்ரேட் : ஷட் அப். என்ன சொல்லுகிறாய் நீ! என்னுடைய டிவோஷனுக்கு நீ எனக்கு இந்த க்ரடிட் கொடுக்கிறாயா? இப்படிச் சொல்ல உனக்கு வெட்கமாக இல்லை? இப்படிச் சொல்வதற்கு நீ வெட்கப்பட வேண்டும்.

மூன்றாமவன் : பேஷ்...பேஷ்...என்ன டிவோஷன்? எனக்கு இரண்டு வருட சிறைவாசம். போலீஸின் டார்ச்சர்.

நான்காமவன் : என் வாழ்க்கையே வீணாகிவிட்டது. பெண்டாட்டி—தலாக்...விவாக ரத்து.

முதலாமவன் : எங்களை வைத்துப் பேரம் பண்ணி வியாபாரம் நடத்தியவனே! இன்று உன் குட்டு வெளிப்பட்டுவிட்டது. எல்லாம் அம்பலமாகிவிட்டது. இனி உன்னுடைய எந்தத் தந்திரமும் எங்களிடம் பலிக்காது.

இரண்டாமவன் : ஏன் என்றால் உன் பிணத்திற்குத் தோள் கொடுக்க நாங்கள் நால்வரும் வந்திருக்கிறோம்.

காம்ரேட் : என்ன இது!...இது...என்ன வேடிக்கை ! சொல்லுங்கப்பா ! இது சும்மா—வேடிக்கைதான்னு...நீங்கள்... நீங்கள் கிண்டல் செய்கிறீர்கள்.

முதலாமவன் : உங்களுக்கு இந்த வேடிக்கை, கீடிக்கை எல்லாம் சுத்தமா பிடிக்காது. அதனால் உங்ககிட்ட வேடிக்கை, விளையாட்டு செய்ய எங்களுக்கு எப்படி துணிச்சல் வரும்?

காம்ரேட் : இல்லை......நீங்கள் அப்படியெல்லாம் செய்ய முடியாது. ஒவ்வொரு விஷயத்தில், அவ்வப்போது நான்தான் உங்களை கையிட் செய்திருக்கிறேன். அறிவு பூர்வமாக உங்களுக்கு மெச்சூரிடி வரும்படி செய்திருக்கிறேன். ஒரு வழி காட்டி இருக்கிறேன். இன்று நீங்கள் எனக்கு எதிராகப் போய்விட்டீர்கள். விரோதியாகிவிட்டீர்கள். விஷயம் ஏதோ இருக்கிறது. நீங்கள்... நீங்கள் கைக்கூலியாகிவிட்டீர்கள்.

[முதலாமவன் உரக்கச் சிரிக்கிறான்]

முதலாமவன் : சீ...ச்சீச்சீ......பார்த்தீர்களா? திருடனுடைய மனது எத்தனை வேகமாய் கணக்குப் போடுதுன்னு! எங்கள் குருவே! இறைவா! கைட்! மாபெரும் சுரண்டல் காரரே! இன்று நாங்கள் திருவாளருடைய கணக்கையெல்லாம் ஒரேயடியாய் முடித்துவிடவே வந்திருக்கிறோம்.

காம்ரேட் : ஐ வில் ஷூட் யூ...

முதலாமவன் : இவர் என்ன சொல்லுகிறார் என்பதைக் கேட்டீர்களா? திருடன் திருடும் போதே பிடிப்பட்டுவிட்டான். அப்படியும் தான் திருடன் என்பதை ஒப்புக் கொள்ளமாட்டேன் என்கிறான்.

[நால்வரும் காம்ரேட்டை நோக்கி முன்னே செல்ல, அவர் பின் வாங்குகிறார்]

இரண்டாமவன் : எங்களுக்கு வழிக்கு கொண்டு வரவும் தெரியும்.

மூன்றாமவன் : ஒப்புக் கொண்டாலும், கொள்ளாவிட்டாலும், ஒன்றும் பரவா யில்லை. நம்முடைய சிந்தாந்தம், யார் குற்றமிழைக்கிறார்களோ அவர் களுக்கு நிச்சயம் தண்டனை கிடைத்தே யாக வேண்டும்.

நான்காமவன் : அதுவும் இக்கரங்களி னால்.

முதலாமவன் : இதோ பார் ! சாலா... எப்படி நாய் மாதிரி வாலைக் குழைத் துக் கொண்டு ஓடுகிறான்?

(எல்லாருமாய் உரக்கச் சிரிக்கின்றனர். மூன்றாமவனும், நான்காமவனும் பாய்ந்து காம்ரேட்டைப் பிடித்துக் கொள்கிறார்கள்)

இரண்டாமவன் : உன்னுடன் நாங்கள் கழித்த நாட்களை மனதில் கொண்டு நாங்கள் உன் பால் சலுகை காட்டியுள் ளோம்.

நான்காமவன் : ஊருக்கு முன்னால் உன்னை ஊர்வலமாகக் கொண்டு செல்லவில்லை. மிகுந்த மரியாதையு டன் உனக்கு மரணத்தை அளிக்கின் றோம்.

முதலாவன் : நீ இல்லாதது எங்களை உறுத்திக் கொண்டு தானிருக்கும். ஆனாலும் என்ன செய்வது? வேறு வழியில்லை.

காம்ரேட் : வேறு வழியில்லை என்ற தொரு சொல் நமது அகராதியில் இல்லை.

முதலாமவன் : தோழர்களே! நமது இந்த பழய நண்பரை சந்தோஷமாக விடை கொடுத்து அனுப்புங்கள். பிறகு இவரது ஆத்மா சாந்தி அடைய ஆசீர் வதியுங்கள்.

[வெளியே கொண்டு போகும்படி ஜாடை காட்டுகிறான்]

ரெட் சல்யூட்...மை... ஃபிரண்ட்... குட்பை.

[மற்ற மூவரும் காமரேட்டை வெளியே இழுத்துச் செல்லுகின்றனர்]

நம் பாதையிலிருந்த பெரிய முள் லேசாக தட்டியதுமே அகன்று விட்டது. பாதை சுத்தமாகி விட்டது. இனி எல்லாம் என் விருப்பப்படியே நடக்கும். எல்லாம் என் இஷ்டப்படி...ஹ...ஹா...ஹா... காம்ரேட் ... மீரி ... ஹ...ஹா...ஹா... இனி இவர்கள் எல்லாம் நான் ஆட்டு விக்கும் பொம்மைகள்...ஹ...ஹா... ஹா...(சிரிப்பு)

[விளக்கு அணைகிறது. மீண்டும் அரங் கத்தின் நடுவேயுள்ள ஸ்பாட் லைட் எரி கின்றது. திரையிலுள்ள கார்ல் மார்க் ஸின் படம் திருப்பி மாட்டப்பட்டுள்ளது. காந்தி அடிகளின் படம் சரியாக உள் ளது. பந்தூவின் வீடு இது என்ப தைக் காண்பிக்க இந்த மாறுதல் போதும். அரங்கத்தில் பந்தூ...பரபரப் புடன்—]

பந்தூ : இதென்ன! கலகம், கலவரம், கொலை, கொள்ளை. தொழில் கூடங் களை, தொழிலாளிகள் கைப் பற்றிக் கொள்கிறார்கள். பங்களாக்களை சூறை யாடுகிறார்கள். நாங்கள் பாடு பட்டு சம்பாதித்தை யெல்லாம் குண்டர் கள் கொள்ளையடிக்கின்றனர். ஆனால் கேட்பாரேயில்லை. இது என்ன அனார்கி! தான் தோன்றித்தனம்? ஜன நாயகம் இதைவிட மோசமாகவா இருந்தது? ஹோ பிரபு! தீனபந்து! இனி இந்த பந்தூவிற்கு நீ தான் துணை. நீ தான் காப்பாற்ற வேண்டும். உலகத்தின் நாயகனே! என்னைக் காப்பாற்று. ஏதா வதொரு வழி செய். ஏதேனும் ஒரு வழி முறையைக் காட்டு. ராஜதந்திரத்தை

பயன்படுத்துவது தான் உசிதமானது. நான் எந்த அரசியல் தந்திரத்தை பயன் படுத்துவது? அந்தக் கொடுமைக் காரர்கள், யார் சொல்வதையும் கேட்ப தில்லை. முதலாளிகளைக் கொல்லுவ தில் முனைந்துள்ளனர். இந்த முட்டாள் களுக்கு முதல் இல்லாமல் நாடு எப்படி இயங்கும் அதன் வளம் எப்படி பெருகும் என்பது புரியவில்லை. முதலாளி ஆவது இருக்கட்டும். முதல் இல்லாமல் மனி தன் வீட்டின் அதிபதியாகக் கூட இயங்க முடியாது. இதென்ன காலமோ யாவருக்கும் புத்தி மழுங்கி விட்டது. புத்தி கெட்டு விட்டது. அரசியல் தந்தி ரங்களுக்கும் சாணக்கியங்களுக்கும் பொக்கிஷமான இந்த மூளை இன்று தன்னைப்பற்றிக்கூட சிந்திக்க முடியாத நிலையை எட்டிவிட்டது. அந்தப் பயல் கள், கைகளை கட்டிக் கொண்டு நிற்கும் அடிமைகளாக, வேலைக் காரர்களாக நினைத்தவர்கள். ஆம், வேலைக்காரர்கள்...விதி...விதி இப்படி யாகி விட்டது. வேலைக்காரன் எஜ மான் ஆவான். எஜமானன் வேலைக்கா ரனாகி விடுவான். நாமே வேலைக்கா ர்களை எஜமானர்களாக்கி, நாம் அவர்களுக்கு ஊழியர்களாகி விட் டால் ஆண்டான் அடிமையாக, அடிமை ஆண்டானாக...

[உட்பக்கம் திரும்பி குரல் கொடுக் கிறான்]

சௌங்கூ அரே சௌங்கூ...

[ஆண் வேலைக்காரனாக வருகிறான்]

ஆண் : ஐயா கூப்பிட்டீங்களா?

பந்தூ: சௌங்கூ நீ எனக்காக மிகவும் உழைத்திருக்கிறாய். ஆனால் நான் உனக்கு கஷ்டத்தைத் தான் கொடுத் தேன். சில சமயம் உனக்குச் சம்பளம் கூட சரியாகத் தரவில்லை.

ஆண் : சேட்ஜி! இதென்ன சொல்லு கிறீர்கள் நீங்கள் ! உங்கள் உப்பைச் சாப்பிடுகிறவன் நான். சம்பளத்தைப் பற்றியெல்லாம் கவலையில்லை. இது நம்ப வீட்டு சமாசாரம் தானே!

பந்தூ : ஆமாம் சௌங்கூ ! நீ எப்பொ ழுதும் இதை உன் வீடாகத் தான் நினைத்து வந்திருக்கிறாய்! ஆனால் நான் தான் ஒரு பொழுதும் உன்னை என்னுடையவனாக நினைத்ததில்லை. ஆனால் இப்பொழுது என் கண்கள் திறந்து விட்டன.

ஆண் : இன்று உங்களுக்கு என்னவா யிற்று சேட்ஜீ!

பந்தூ : ஒன்றும் கேட்காதே! சௌங்கூ ஒன்றும் கேட்காதே! இன்று கனவில் பகவான் கிருஷ்ணர் வந்தார். அவர் நான் தண்டனைக்குப் பாத்திரமான வன் என்று கூறினார். தவறுக்குப் பச் சாதாபப்படு இல்லாவிடில் வைகுண்டத் திலென்ன? நரகத்தில் கூட உனக்கு இடம் கிடைக்காது என்றார்.

ஆண் : சேட்ஜீ தாங்கள் பாக்கியசாலி. நல்ல புண்ணியம் செய்தவர். நீங்கள் மகான் சேட்ஜி!

பந்தூ : இல்லை சௌங்கூ இல்லை... நான் ஒன்றுமேயில்லை. நானொரு பாபாத்மா? நீ எனக்கு உதவி செய்தால் நீ என்னை மகான் ஆக்க முடியும்.

ஆண் : உத்தரவிடுங்கள் சேட்ஜி!

பந்தூ : என்னை சேட்ஜி...என்று கூப் பிடாதே! நான் உன்னை சேட்ஜியாக்க விரும்புகிறேன்.

ஆண் : இதென்ன சொல்லுகிறீர்கள்! சேட்ஜி!

பந்தூ : பகவான் கிருஷ்ணர் எனக்கு என்ன உத்தரவிட்டாரோ அதைத்தான் சொல்லுகிறேன். சௌங்கூ... அவரு டைய உத்தரவின்படி நான் உனக்கு வேலைக்காரனாக இருக்க முடியும்.

ஆண் : இதெப்படி முடியும்? சேட்ஜி! நான் உங்கள் வேலைக்காரன். இது உங்கள் வீடு.

பந்தூ : இன்றிலிருந்து இந்த வீடு உன்னுடையது. என்னைக் காப்பாற்று சௌங்கூ...என்னை நரகத்திற்கு பாத்திரமானவனாக ஆக்கிவிடாதே...நான் கடவுளுக்கு என்ன பதில் கூற முடியும்?

ஆண் : அது சரி! ஆனால் நீங்கள் கூறியதை நான் ஏற்றுக் கொண்டால் நான் கடவுளுக்கு என்ன பதில் கூற முடியும்?

பந்தூ : சௌங்கூ......எஜமான் இடும் கட்டளையை ஏற்றுக் கொள்ள வேண்டியது வேலையாளியின் கடமை. இதன்படி பார்த்தாலும் நீ நான் கூறுவதை ஏற்றுக் கொண்டுதானாக வேண்டும். கடமைக்குப் பின் வாங்குவது மனித தர்மமல்ல. நீ உன் கடமையிலிருந்து பின் வாங்காதே.

ஆண் : ஆனால் இதனால் எனக்கென்ன பயன்? நாளைக்கே பகவான் கிருஷ்ணன் உத்தரவிட்டால் நான் மீண்டும் வேலைக்காரனாக வேண்டும். பிறகு நான் வேலைக்காரனாகவும் முடியாது. எஜமானனாகவும் முடியாது. வேண்டாம்பா.....இந்த பேரத்தில் எனக்கு விருப்பமில்லை.

பந்தூ : இல்லை. சௌங்கூ இந்த வீடு என்றென்றும் உன்னுடையது. நீ தான் இதன் எஜமானன். நான் வாக்குறுதி செய்து தருகிறேன். நான் என் வாக்கிலிருந்து ஒரு பொழுதும் பின் வாங்க மாட்டேன். உனக்கு எழுதித் தருகிறேன்.

ஆண் : உண்மையாகவா!

பந்தூ : ஆம் உண்மையாகத்தான். இக்கணத்திலிருந்து நீ என் எஜமானன். என்னை ''ஏய்'' என்று கூப்பிடலாம்.

ஆண் : எப்படி...

பந்தூ : ஏய் இங்கே வா! இதைச் செய்! அதைச் செய்!

ஆண் : (அப்படியே நடித்து) ஏய் ! இங்கே வா! இதைச் செய்! அதைச் செய்!

பந்தூ : இந்தா! என் கோட்டு...இந்தா குல்லாய்! எடுத்துக் கொள்.

[பந்தூ தன் கையால் ஆணிற்கு கோட்டையும், குல்லாவையும் அணிவிக்கிறார். அவனது துண்டைத் தான் எடுத்துக் கொள்கிறார்]

பந்தூ : இப்பொழுது நீ சேட் மாதிரித் தான் இருக்கிறாய். இப்பொழுதிலிருந்தே என்னிடம் வேலை வாங்கத் துவங்கிவிடு.

ஆண் : ஏய்! எனக்கு ஒரு டம்ளர் தண்ணீர் கொண்டுவா!

[உள்ளே போகிறார்]

ஆண் : சௌங்கூ—இப்பொழுது சேட்ஜீயாகிவிட்டான். சேட் சௌங்கூமல்... ஹ...ஹா...சேட். என் கனவு உண்மையாகிவிட்டது. இனி எனக்கு என்ன தோன்றுகிறதோ செய்வேன். பணமிருந்தால் மனிதன் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். செய்ய முடியும். பணம் மிக சக்தி வாய்ந்தது.

[அந்த நால்வரும் வருகின்றனர்]

முதலாமவன் : சேட்ஜி! நீங்கள் சொல்லுவது முற்றிலும் உண்மை.

ஆண் : யாவற்றையும் சரியாக உணர்ந்து அறிந்தவன். ஒவ்வொருவருடைய உண்மையான சொரூபத்தை கண்டறிந்தவன்தான் உண்மையைச் சொல்லுகிறான்.

இரண்டாமவன் : எங்களுக்கு உங்களுடைய உண்மை சொரூபம் பற்றித் தெரிந்துவிட்டது. இனி உங்களுக்கும் எங்களைப் பற்றித் தெரிய வேண்டும் என்று விரும்புகிறோம்.

ஆண் : இதென்ன! உங்களுக்கு என்னைப் பற்றித் தெரியுமா?

மூன்றாமவன் : தாங்கள் பெரும் செல்வந்தர். சேட்ஜி என்று தெரியும்.

ஆண் : ஓ......அச்சா...அச்சா......அது வந்து உண்மைதான்.

நான்காமவன் : நாங்கள் செல்வத்தைக் கொள்ளையடிப்பவர்கள். சேட்களின் எதிரிகள்.

ஆண் : நீங்களெல்லாம் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்? உள்ளே எப்படி வந்தீர்கள்.

முதலாமவன் : நாங்கள் தங்களுடைய ஊழியர்கள். தங்களுக்குச் சேவை புரிய வந்திருக்கிறோம்.

இரண்டாமவன் : எந்த செல்வத்தின் மீது தாங்கள் பாம்பாகி அமர்ந்து கொண்டிருக்கிறீர்களோ, அது நாங்கள் பாடுபட்டு வியர்வை சிந்தி சம்பாதித்தது.

மூன்றாமவன் : நாங்கள் பாடுபட்டு உழைத்து சம்பாதித்த பொருளை எடுத்துக் கொள்ள பாம்பின் கழுத்தைப் பிடித்து அதன் தலையை நசுக்க விரும்புகிறோம்.

[பந்தூ தண்ணீர் டம்பளருடன் வருகிறார்]

பந்தூ : சேட்ஜீ! இந்தாருங்கள் தண்ணீர் [தண்ணீரைக் கொடுத்துவிட்டு போய்விடுகிறார்]

நான்காமவன் : ஏய்! சேட்ஜி! உனது கடைசி ஆசை என்ன? சொல்லு! எங்களுக்கு அதிக அவகாசம் இல்லை.

ஆண் : நீங்கள் என்னைக் கொல்ல விரும்புகிறீர்கள்? நான் உங்களுக்கு என்ன தீங்கு செய்தேன்? என் குற்றம் என்ன?

முதலாமவன் : உன்னுடைய மாபெரும் குற்றம், நீ சேட்டாக செல்வந்தனாக இருப்பது.

ஆண் : இல்லையில்லை. நான் சேட்ஜீ இல்லை. நான் வேலைக்காரன் ஊழியன்.

இரண்டாமவன் : ஊழியன், தொண்டன் என்று சொல்லிக் கொண்டே நீங்கள் எல்லோரையும் சுரண்டி சாப்பிட்டு விட்டீர்கள்.

மூன்றாமவன் : இனி உன்னுடைய தந்திரமெல்லாம் பலிக்காது. மரண தூதுவர்கள் வந்துவிட்டார்கள்.

நான்காமவன் : இவர்கள் கையிலிருந்து நீ தப்புவது கடினம்.

ஆண் : இல்லை. இல்லை. நான் சொல்வது உண்மை. என்னை நம்புங்கள்.

முதலாமவன் : உன்னை நம்புவது...ஹ ...ஹா...ஹ...இவன் என்ன சொல்லுகிறான் என்று கேட்டீர்களா? நம்புங்கள் ஹ...ஹ...ஹா...(சிரிப்பு)

[மற்ற மூவருக்கும் ஜாடை காட்டியவாறே]

தோழர்களே! இவனுடைய உளரலை எல்லாம் கேட்டுக் கொண்டிருக்க யாருக்கும் நேரமில்லை.

[மூவரும் சிரித்துக் கொண்டே முன்னே வருகின்றனர். ஆண் திகிலடைந்தவனாய் பின் வாங்குகிறான். அவர்கள் அவனைப் பிடித்து வெளியே இழுத்துச் செல்லுகின்றனர். தொலைவிலிருந்து கூச்சல் கேட்கிறது. முதலாமவன் சேட்டின் இல்லத்தை கூர்ந்து பார்வையிடு

கிறான். இதற்குள் மற்ற மூவரும் வந்துவிடுகின்றனர்.

வேலையை முடித்துவிட்டீர்களா?

மூவரும் : ஆம்...

முதலாமவன் : என் எண்ணப்படி இப்பொழுது வேலை தீர்ந்துவிட்டது. நம்ப மார்ஜினில் எத்தனை ஏரியா இருந்ததோ கிட்டத்தட்ட கவர் செய்தாகி விட்டது.

இரண்டாமவன் : நீ சொல்வதற்கு என்ன அர்த்தம்?

மூன்றாமவன் : அதாவது நம் வேலை தீர்ந்துவிட்டது.

நான்காமவன் : இவன் பேச்சில் ஏதோ சூது இருப்பது போல் தோன்றுகிறது.

முதலாமவன் : என்னை சந்தேகப்படுவது என்பது தன் மரணத்திற்கு அழைப்பு விடுவது போல் புரிந்ததா! [பிஸ்டலை எடுத்து சுடுவது போல் நடிக்கிறான். நான்காமவனின் மீது குண்டு பாய்கிறது]

இரண்டாமவன் : நீ எங்களுக்கு நம்பிக்கை துரோகமா செய்கிறாய்? ஏமாற்றுகிறாயா...நான்...உன்னை......

[முதலாமவனின் இன்னொரு குண்டு அவனையும் வீழ்த்துகிறது]

மூன்றாமவன் : உன் தோழர்களுக்கா இந்த முடிவு?

முதலாமவன் : தோழர்கள் அல்ல. பங்காளிகள்.

மூன்றாமவன்: சரி...சரி...வழியிலிருந்து தடங்கல் எல்லாம் நீங்கி போய்விட்டது.

முதலாமவன் : இல்லை. இன்னமும் ஒன்று மீதமிருக்கிறது.

[மூன்றாமவனையும் சுட்டுவிடுகிறான். அவன் கீழே வீழ்ந்ததும் பிஸ்டலை ஜேபில் போட்டுக் கொண்டு, உரக்கச் சிரிக்கிறான்- பின்னாலிருந்து கையில் கத்தியுடன் பந்நூ சத்தமிடாமல் வந்து அவனது முதுகில் குத்திவிடுகிறார்.

முதலாமவன் கீழே வீழ்கிறான். அவன் வீழ்ந்ததும் ஒளியுடன்கூட திரைவிழுகின்றது. இதன் பின் இடது புறமிருந்தும் வலது புறமிருந்தும் ஸ்பாட்லைட்டின் ஒளி அரங்கில் பரவுகிறது. ஆணும், பெண்ணும் அரங்கத்திற்குள் வருகின்றனர்].

ஆண் : பேராசையும், லாபமும் எல்லா நம்பிக்கைகளையும் எதிர் பார்ப்புகளையும் அழித்துவிட்டது. சுயநலமெனும், புழுதியில் புதையுண்டு போய்விட்டது.

பெண் : காரெக்டர் ஒழுக்கமான நடத்தை என்னும் அந்த சூரியன் கறுப்பாக இருந்தவன் — கறுப்பாகவே இருந்துவிட்டான்.

ஆண் : எந்த விதமான மாற்றங்களும் அதன் மீது எந்த விதமான பாதிப்பையும் ஏற்படுத்த இயலவில்லை.

பெண் : யாருமே அதன் மீது படிந்திருந்த தூசியைத் தட்ட முயலவில்லை.

ஆண் : எல்லோருமே கறுப்பு சூரியனைக் கொண்டு தங்கள் தங்கள் பாதைகளுக்கு ஒளி தர விரும்புகின்றனர்.

பெண் : கறுப்பு சூரியனின் ஒளியில் தங்கள் லட்சியத்தை குறிகோளைத் தேட விரும்புகின்றனர்.

ஆண் : காரெக்டர் இல்லாத சமுதாயம் எவ்வாறு முன்னேற்றம் காண இயலும்?

பெண் : காரெக்டர் இல்லாத மனித இனம் எத்தனை காலம் தனது கொடியைப் பறக்கவிட இயலும்.

ஆண் : எந்த நாட்டிற்கு காரெக்டர் இல்லையோ, அது எவ்வாறு நிலைத்திருக்க முடியும்? அதன் ஆதியும் மோசமானது. அந்தமும் மோசமானதாகவே இருக்கும். அதை ஒரு பொழுதும் சீர்திருத்தவே முடியாது. முடியவே முடியாது.

திரை விழுகின்றது

நன்றி : சமகாலீன் ஸாஹித்ய

# மக்கள் தொடர்பில் இந்திய முன் மாதிரி கே. வி. சுப்பண்ணா

அம்ஷன்குமார்

தனிமனிதனை நிறுவனம் என்றழைப்பது மிகவும் காலாவதியான பிரயோகம். ஆனால் கே. வி. சுப்பண்ணாவை இலக்கியம், சினிமா, நாடகம் ஆகிய வற்றிற்கான மக்கள் தொடர்பு நிறுவனம் என்று குறிப்பிடுவது அப்பிரயோகத்திற்கு உயிர் கொடுப்பதாகும். பல விருதுகளை ஏற்க மறுத்துள்ள சுப்பண்ணா ரோமன் மகஸேஸே விருதினை மட்டும் ஏற்கக் காரணம் அது அவரும் அவரது சகாக்களும் உருவாக்கிய நிநாஸம் 'நிறுவனத்'திற்காக அளிக்கப்பட்டது எனக் கருதுவதால் தான்.

கர்நாடக மக்களிடம் அவரது நிநாஸம் (நீலகண்டேஸ்வர நாட்டிய சேவா சங்கம் என்பதன் சுருக்கம்) ஏற்படுத்தியுள்ள ஆரோக்கியமான பாதிப்பு கணிசமானது. கர்நாடகத்தைத் தாண்டியும் இப்பாதிப்பு சென்றுள்ளதை என்னால் உறுதியாகக் கூறமுடியும். 1977ல் நிநாஸம் ஹெக்கோடு கிராமத்தில் உலகத் திரைப்பட பொக்கிஷங்களைத் திரையிட்ட நிகழ்ச்சிதான், எனக்கு, நல்ல சினிமாவிற்கு இந்திய மக்கள் எதிரிகள் அல்லர் என்ற நம்பிக்கைக்கான பலத்த நிரூபனமாக இருந்தது. அதுவரை நான் ஒரு தியரி என்கிற அளவில் மட்டும் அந்த நம்பிக்கையைக் கொண்டிருந்தேன். பின்னர் அப்பரிசோதனையை ஆதர்சமாகக் கொண்டு 'சினிமா ரசனை' புத்தகத்தை எழுதினேன்.

நிநாஸம் ஒரு சுதேசி இயக்கம். சுதேசி இயக்கம் என்றவுடன் அது இந்திய சுதந்திரப் போராட்டத்துடன் சம்பந்தப்பட்டது என்று முடிவு கட்டிவிட வேண்டாம். உண்மையில் நிநாஸத்தின் கால்கோள் விழா நடைபெற்றது 1949ல் தான். நம் சமூகத்தில் புரட்சி வேண்டும் கலகம் வேண்டும் என்றெல்லாம் ஆறு காலமும் சங்கு ஊதும் நமது அறிவு ஜீவிகள் செலாவணி பெற்ற மேல் நாட்டு சிந்தனை மகுடியைக் கேட்டவுடன் சர்வமும் அடங்கியவர்களாய் அதையே லஜ்ஜையின்றி தங்களுடையதாக வாசித்தும் விடுவார்கள். மேலைய சிந்தனையை தர்க்கிப்பது, அணுகுவது என்பதிலெல்லாம் கலகம், புரட்சி எதையும் செயற்படுத்த வேண்டாம் என்று முடிவு கட்டிவிடுகிறார்கள். ஆனால் சுப்பண்ணா நிநாஸம் வாயிலாக நமது தேவைகளை எண்ணிப் பார்த்தவராக செயல் புரியத் தொடங்கினார். இதை சிறப்பான பொருளில் சுதேசி இயக்கம் என்று கூறுவது பொருத்தமல்லவா!

சுதந்திர இந்தியாவின் வருங்காலப் பிரச்னைகளை உணரத் தொடங்கிய எழுச்சி மிக்க இளைஞர்களில் ஒருவராக சுப்பண்ணா. அவருக்கு அப்பொழுது வயது 17. இந்திய மக்கள் குறிப்பாக கிராமத்திலுள்ள பெருவாரியானவர்கள் உலகினைப் புரிந்து கொள்ளவும் தகவல்களை பெற்றுக் கொள்ளவும் வசதி அற்ற நிலை. தகவல் மற்றும் அறிவு ஆகியன கலாச்சார தளத்தில் ஆழமானதாகத் தரப்பட வேண்டும் என்னும் முடிவுடன் அவரும் அவருடன் ஒத்த மன நிலை கொண்ட இளைஞர்களும் துவக்கிய தன்னார்வக் குழுதான் நிநாஸம். சுப்பண்ணாவின் சிறப்புத் தன்மை அவர் நகரத்தில் படித்திருப்பினும் (மைசூரில் பி.ஏ.) செயலாற்ற தனது களனாக கிராமத்தை தேர்ந்தெடுத்தது

தான். 'கிராமத்திற்கு திரும்பிச்செல்லுங்கள்' என்று காந்தி விடுத்த வேண்டுகோளுக்கு செவி சாய்ப்பாகவும் இது இருக்கலாம். மேலும் அவர் ஒரு கிராமவாசி என்பதாலும் இது நடந்திருக்கலாம். இருப்பினும் அப்போதைய படித்த தலைமுறையினர் பலரையும் போல அவர் கிராமத்தை உதைத்துவிட்டு நகரத்து சலுகைகளை உறிஞ்ச சென்ற புதிய அதிகார வர்க்கத்தினனாக தன்னை மாற்றிக் கொள்ளவில்லை என்பது கவனிக்கப்பட வேண்டிய விஷயம்.

சுப்பண்ணா இன்றளவும் தனது வேர்கள் கிராமத்தில் இருப்பதாக நம்புபவர். அவர் பகலில் விவசாயி. அவரது மகன் அக்ஷரா (இவர் பெயரில் சுப்பண்ணா பதிப்பகம் வைத்துள்ளார்.) வெளிநாட்டிற்கு சென்று நாடகம் பயின்றவர். இவரும் ஹெக்கோடுவில் விவசாயம் செய்து கொண்டே கலாச்சார நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார். வருடா வருடம் திரைப்பட விழாக்களை நடத்துவது, சினிமா ரசனை வகுப்புகள் நடத்துவது புத்தகங்கள் வெளியிடுவது போன்ற பலதரப்பட்ட செயல்களைப் புரிகிறார் சுப்பண்ணா. ஒரு தகவல் திருத்தம். சுப்பண்ணாவை ஒரு நாடக இயக்குநர் என்று பத்திரிகைகள் தவறாமல் அறிமுகப் படுத்துகின்றன. ஆனால் நிநாஸம் இதுவரை 28 நாடகங்களை மேடையேற்றியிருப்பினும், 'நான் ஒரு நாடகத்தைக்கூட இயக்கியதில்லை,' என்று சுப்பண்ணா விளக்கம் தருகிறார். நிநாஸத்தின் நடவடிக்கைகள் அனைத்திற்கும் மேற்பார்வையாளராக அவர் விளங்குகிறார். 400க்கும் மேற்பட்ட புத்தகங்களை வெளியிட்டுள்ளார். பல மொழிபெயர்ப்புகளும் அதிலடங்கும்.

சென்ற மாதம் சென்னையில், சென்னை ஃபிலிம் சொஸைடி மற்றும் கைவினைப் பொருட் கழகம் ஆகியன ஏற்பாடு செய்திருந்த 'நேருக்கு நேர்' சந்திப்பில் பலதரப்பட்ட கேள்விகளுக்கும் கேள்விக்கேற்ற தொனியில் பதில் கூறாது நேரான பதில்களை சிரத்தையுடன் கூறினார். உதாரணமாக, மேல்நாட்டு நாடகங்களை முற்றிலும் மாறுபட்ட களனில் உள்ள நம் நாட்டு கிராம மக்களுக்கு போட்டுக் காட்டுவது எவ்வளவு பொருத்தம் வாய்ந்தது என்று ஒரு கேள்வி. ஐஸன்ஸ்டீனையும் ஃபெல்லினியையும் கிராமத்து ஜனங்களுக்கு போட்டுக் காண்பித்ததற்காக என்னைப் பாராட்டுகிற நீங்கள், அவர்கள் முன் பெக்கெட்டையும் அயனஸ்கோவையும் மேடை ஏற்றினால் அது பொருத்தம் வாய்ந்ததா என்று கேட்பதில் நியாயம் உள்ளதா? என்றெல்லாம் கேள்வியாளர்களை மடக்காமல் நேரான பதிலைக் கூறினார். "ஒரு குறிப்பிட்ட ஆங்கில நாடகத்தைப் பார்ப்பதன் மூலம் 18ம் நூற்றாண்டில் இங்கிலாந்து எப்படியிருந்தது என்பதை இங்குள்ள கிராம மக்கள் தெரிந்து கொள்ளட்டுமே. அவர்களுடைய பிரச்சனைகளை மட்டும் தான் அவர்கள் நாடகமாகப் பார்க்க வேண்டும் என்று நான் நினைக்கவில்லை. முப்பது வருடங்களுக்கு மேல் நாடகங்கள் போட்டு வருகிறோம். கிராமத்துக்காரர்கள் எங்களை வெளியே போ என்று இதுவரை கூறியதில்லை." என நகைச் சுவையுடன் முடிக்கிறார். நகரத்திற்கும் கிராமத்திற்குமான இடைவெளி குறைந்து வருவதையும் குறிப்பிட்டார்.

கலையில் பிரச்சாரம் கூடாது என்பதில் தீர்மானமான கருத்துகள் கொண்டிருக்கிறார். 'உத்பல்தத் அருமையான நடிகர், ஆனால் அவரது நாடகங்கள்—எல்லா நாடகங்களுமே—சகிக்க முடியாதவையாக உள்ளன. காரணம் அவரது பிரச்சாரம் தான். லோகியாவின் கொள்கைகளில் ஈடுபாடு சோஷலிஸ்ட் கட்சியில் தொடர்பு ஆகியன கொண்டிருந்தாலும் பிரச்சாரத்தை நாடக மேடைக்கு தான் எடுத்து வருவ



8.1. Karnataka

தில்லை என்னும் பொருள்பட பேசினார். நிநாஸம் போட்ட நாடகங்களில் மிகச் சிறப்பானதாக Three Penny Opera வைக் குறிப்பிட்டார்.

நிகழ்ச்சி முடிவின் போது அனைவரையும் ஹெக்கோடு கிராமத்திற்கு வருமாறு அன்பு அழைப்பு விடுத்தார். அவரது மக்கள் தொடர்பு பன்முகம் வாய்ந்தது.

○ ○ ○

## இந்த ஆண்டு நான் பார்த்த மூன்று சென்னை நாடக நிகழ்ச்சிகள்...

அசோகமித்திரன்

'மனித இனம் போய்ச் சேரும் இடம்' —என்ற தலைப்பில் சென்னை மாக்ஸ் முயுல்லர் பவன் அளித்த நாடக நிகழ்ச்சியில் (மியூசிகல் அகாடமி, 30-3-91) தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளில் மூன்று சிறு நாடகங்கள் மேடை வெளிப்பாட்டில் மூன்று வெவ்வேறு போக்குகளைத் தெரியப்படுத்தின. ஆங்கில மொழி, இந்திய இயல்பில் (ஒரு பிரிவினருக்காவது) ஒன்றிப் போனதும் ஆங்கில மொழியில் இருபது ஆண்டுகள் நாடகம் நடத்திய டைரக்டரின் அனுபவம் மூன்று நாடகங்களில் ஆங்கில நாடகத்தை மிகச் சிறப்பாக காட்டியதோடு வேறு இரு நாடகங்களின் குறைபாடுகளையும் தெரியப்படுத்தியது. சாமுவேல் பெக்கெட்டின் 'எண்ட் கேம்' (ஆட்டத்தின் இறுதி கட்டம்) ஒருவன் தன்னுடைய இயலாமையையும் துரதிர்ஷ்ட நிலையையும் இன்னொரு துரதிர்ஷடக்காரனையும் இம்சித்து ஒரு குரூரமான அமைதி பெறும் இயல்பை மீண்டும் மீண்டும் பயன்படுத்திய பல நாடகங்களில் ஒன்றாகும். மூன்று நாடகங்களில் மிகவும் கடினமானதும் இந்நாடகந்தான். இதர இரு நாடகங்களிலும் பார்வையாளரின் பார்வைப் புலனை வசப்படுத்தும் அம்சம் வலுவாக இருந்தது. 'எண்ட் கேமி'ல் இது தேவைப்படும் அளவுக்கு மட்டும் இருந்தது. ஒரு பாத்திரம் தொடர்ந்து படுக்கையிலேயே கிடப்பவன். இன்னொருவனுடைய மேடை அசைவு, படுக்கையில் கிடப்பவனின் குரல் கேட்டு உள்ளிருந்து வெளியே வருவதை ஐந்தாறு முறை செய்வதாகும். ஒரு தீவிர அனுபவம் வாழ்க்கையின் இதர அம்சங்கள் குறித்தும் தீவிர அனுபவம் கொள்ள வைக்கும் இயல்புக்கு இந்த நாடகம் நல்ல எடுத்துக்காட்டாக அமைந்தது.

இதர இரண்டு நாடகங்களும் படாடோபம், பிரமிப்புணர்வு ஆகியவற்றில் ஊட்டம் கொள்பவை. தமிழ் மொழியில் நடத்தப்பட்ட நாடகத்தில் போலியுணர்வு வேறு தூக்கலாக இருந்தது.

* * *

நவீன நாடகங்களில் போலியுணர்வைத் தவிர்ப்பதற்கு விசேஷப் பயிற்சி தேவைப்படுகிறது. நவீனத்துவம் மட்

டுமே மேடைத் தகுதிகளைத் தேவை யற்றதாக்கி விடாது என்பதை மீண்டும் மீண்டும் வலியுறுத்த வேண்டி வரு கிறது. ஐக்யா குழுவினர் நடத்திய 'குட்டி இளவரசன்' (மியூசியம் தியேட் டர், 7-9-91), அரூபம் குழு வழங்கிய 'மரணத்திற்கும் வாழ்தலுக்கும் இடை யில் ஐந்து நாடகங்கள்' (மியூசியம் தியேட்டர், 10-9-91) இரு நிகழ்ச்சி களும் போலியுணர்விலிருந்து விடுபட் டிருந்தது, இன்று தமிழ் நாடகம் நடத்த வரும் இளைஞர்கள் பக்குவ முற்றிருப்பதைக் காட்டின. 'குட்டி இளவரச'னுக்குக் கோர்வையான கதையொன்று இருந்ததும் நடிகர் களுக்கு மேடை லாகவம் இருந்ததும் நாடகத்தை வெற்றிபெறச் செய்தன. 'மரணத்திற்கும்...நாடகங்கள்' எழுத் தாளர் — ஒலிபரப்பாளர் தொலைக் காட்சிச் செய்தி வாசிப்பாளர் நிஜந்தன் அவர்களின் சுயமான முயற்சி. அதன் முதற்பகுதியான மியூசிகல் சேர் மிகுந்த எதிர்பார்ப்பைத் தந்தது. நிறைய சொற்கள், நீண்ட வாக்கியங்கள் நல்ல நாடகத்துக்கு அத்தியாவசியமில்லை யானாலும் சொல்லப்படுபவையின் பங்கு பூரணமாக இருக்க வேண்டும்.

'குட்டி இளவரசன்', 'மரணத்திற்கும்... நாடகங்கள்' இரண்டும் நம்பிக்கையளித் தாலும் அரங்கைப் பயன்படுத்துவதில் வெற்றி என்று கூறுவதற்கில்லை. இரண்டிலும் ஒளி ஏற்பாடு இருந்த அள வுக்கு அதைப் பயன்படுத்தியதில் சிறப்பு இருக்கவில்லை. தொழில் நுணுக்கத்தைப் பயன்படுத்தியதில் சிறப்பு இருக்கவில்லை. தொழில் நுணுக்கத்தைப் பயன்படுத்துவதில் தேர்ச்சியின்மை நாடகத்தின் உண்மை யான அனுபவத்தையும் மட்டுப்படுத்தி விடும். இக்குறைகளைக் குறிப்பிடுவது இரு நாடகங்களும் மகிழ்ச்சியும் நம்பிக் கையும் அளித்த காரணத்தினால்தான். குட்டி இளவரசனாக நடித்த நண்பருக் கும் எழுத்தாளர் நிஜந்தனுக்கும் தனிப் பட்ட முறையில் வாழ்த்து கூற வேண்டும்.

○ ○ ○

## ஒரு கருத்தரங்கு தெளிவாக்கிய கருத்து

அசோகமித்திரன்

"நம் இயலாமையும் குறைகளும் இங்கு நன்கு வெளிப்பட்டு விட்டது" என்று ஒரு நண்பர் கூறினார். அவர் அப் போதுதான் எண்பதுகளில் தமிழ் நாட கம் பற்றிப் படிக்கப்பட்ட கட்டுரைக்குப் பின்குறிப்பாகச் சில தகவல்களைக் கூறிவிட்டு வந்தார். ஆனால் கட்டுரை யும் துணைத் தகவல்களும் கூட்டத்தில் விசேஷ நம்பிக்கையூட்டவில்லை என் பதை உணர முடிந்தது. மலையாளம், கன்னடம் மற்றும் தெலுங்கு ஆகிய மொழிகளில் கட்டுரை வாசித்தவர்களும் கட்டுரைகளை அடுத்துப் பேசினவர் களும் அந்தந்த மொழிகளில் எண்பது களில் பெரியசாதனை ஏதும் நிகழ்த்தப் படவில்லை என்றுதான் கூறினார்கள். ஆனால் அதெல்லாம் ஓரளவு சாதனை நிகழ்த்திய உணர்வும் அவர்களுடைய பணியிலும் பேச்சிலும் நம்பிக்கை இருப் பதையும் காட்டின.

தென் பிராந்திய கலாச்சார மையத்தின் பெயரிருந்தாலும் நான்கு தென்னிந்திய மொழிகளில் எண்பதுகளில் புனைகதை, கவிதை, நாடகம் பற்றி பெங்களூரில அக்டோபர் 3, 4, 5 தேதிகளில் நடந்த கருத்தரங்கின் பிரதான பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்கள் கர்நாடக அரசின் கலாச்சாரத் துறையும் கர்நாடக சாகித்ய அகாடமியும்.

தமிழ் வரை கர்நாடகத்தில் அது சற்று தயக்கத்துக்குரிய நேரம். காவிரி நீர்ப் பிரச்னை, திருவள்ளுவர் சிலை வைப்பு போன்ற விஷயங்களில் சாதாரண கர்நாடகக் குடிமகன் கூட சற்று உணர்ச்சி வசப்பட்டிருக்கக் கூடிய நேரம். இரு மொழியினருக்கும் சர்ச்சையை வளர்த்துப் பெரும் பிளவை ஏற்படுத்தாது இருக்க வேண்டிய அவசியமிருக்கிறது. ஆனால் காலங்காலமாக கன்னடக்காரர்கள் விருந்தோம்பலுக்குப் புகழ் பெற்றவர்கள். பெங்களூர் கருத்தரங்கு அவர்களுக்குப் புகழ் சேர்க்கும் வண்ணந்தான் இருந்தது.

கருத்தரங்குக் கட்டுரைகளில் ஒரு சிரமம், மிகச் சாதாரணமானதும் விளைவுகளும் இல்லாத நிகழ்ச்சியும் மிகவும் முக்கியமானதும் பெரும் பிரயாசையால் நடத்தப்பட்ட நிகழ்ச்சியும் ஒரே வரிசையில் குறிக்கப்பட்டுவிடக்கூடும். கருத்தரங்கின் தலைப்பு 'சமூக மாற்றமும் எண்பதுகளில் எழுத்தும்'. எழுத்தை விமர்சனப் பூர்வமாக அணுகினால் பல பிரபல நாடகங்கள் விலக்கப்பட்டுவிடும். சமூக மாற்றம் என்று அணுகினால் கலை ரீதியாக மிகவும் பின்தள்ளப் படக்கூடிய நிகழ்ச்சிகள் விரிவாகக் கூறப்பட வேண்டும்.

விமர்சகர்களிடையும் இது பற்றி ஒரு சீரான பார்வையில்லை. அதிகம் மக்கள் ஆதரவு பெறாததோர் முயற்சி விமரிசகர்களுக்கு ஏதோ வகையில் நெருக்கம் கொண்டிருந்தால் 'உயரிய முயற்சியை பாமர ரசனையையே போற்றும் பொதுமக்கள் கவனிக்கத் தவறியது இழப்பு'.

அதே முயற்சி கூட்டம் கூட்டினால் 'மக்கள் குரலே மகேசன் குரல்.'

அந்த முயற்சி விமரிசகருடைய எதிர் அணியுடையதாக இருந்து தோல்வியுற்றால் 'மக்களே நிராகரித்துவிட்டார்கள்.'

வெற்றி பெற்றால் 'வெகு ஜனக் கவர்ச்சி கொண்ட தரமற்ற படைப்பு.'

○ ○ ○

பிரெஞ்சு எழுத்தாளர் ஜெனேயின் Death Watch நாடகம் டில்லி ஸ்ரீராம் சென்டரில் ராஜேந்திரனின் இயக்கத்தில் செப்டம்பர் 5, 6, 7 தேதிகளில் நடைபெற்றது. குற்றவாளிகளின் மனவியல் உலகை சித்தரிக்கும் இந்த நாடகம் மன இறுக்கத்தை சிறப்பாக வெளிப்படுத்தியிருப்பதாக டில்லிப் பத்திரிகைகள் பாராட்டியுள்ளன.

---

* இந்த இதழில் வெளியாகியுள்ள நிஜந்தனின் 'ஒரு நடுக்கமான மீட்சிக்கு' நாடகத்தில் சில தவறுகள் நேர்ந்துள்ளன. பின்வருமாறு திருத்தி வாசிக்கவும்.

1. பக்கம் 3 பாரா 3 உடையணிந்திருந்தவர்கள் — உடையணிந்தவர்கள்

   பக்கம் 10
   கடைசி வரிக்கு முன்னால் பெண் : (டைப் அடித்தபடி) ஆனாலும் உனக்கும் வாய்ப்பு வரும்.

2. பக்கம் 12 கடைசியில் வரும் 4 வரிகளை இவ்வாறு மாற்றிப் படிக்கவும்.

   குமார் : (நடுவரிடம்) எப்படி?

   நடுவரின் குரல் : இரட்டைத் தவறு.

   குமார் : இரண்டாம் முறை கோர்ட் ஆகவில்லை.

   நடுவரின் குரல் : கோணங்கள் மாறுபடுகின்றன.

3. பக்கம் 17 இரண்டாவது குறிப்பில் 'வீரன் 2ம் அவனைப் பிடித்துக் கொள்ள, வீரன் 4 அவனிடமிருந்து துப்பாக்கியைப் பறித்துக் கொள்கிறான்' என்ற வரிக்குப் பிறகு 'துப்பாக்கியை கைதி வாங்கிக் கொள்கிறான்' என்ற வரியை சேர்த்துப் படிக்கவும்.

---

## பொருளடக்கம்



அட்டையில் : குட்டி இளவரசனில் வரும் காட்சி

ஓவியம் : அன்த்வாந்த் செந்த் எக்சுபெரி